# உங்களுக்கே... பருவ மங்கையின்
# பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மிளிரும் எழிலுக்கே... ஜேய் அழகு சோப்! சரும நெகிழ்ச்சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்தமிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. வில்லை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினாத் தாளுறை தரித்தது ஜேய் ஒன்றுதான்.

ஜேய்–நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

## ஜேய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
தயாரிப்பு

*235A TM.*



# கல்கி பொருளடக்கம்



பட விளக்கம் 8ம் பக்கம்

கீலக ஆனி 31 — ஜூலை 14



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# சவப்பெட்டியில் ஆணி!




நாகர்கோவில்
தென்காசி
தமிழ் நாட்டில் காங்கிரஸ்


அற்ப சொற்பம் கிடைத்தாலும்
அந்த மட்டும் லாபமே!
ராஜமானியம்
காங்கிரஸ்
அரசாங்கம்
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 50



# ஜனநாயகத்தைக் காப்பாற்ற வேண்டும்

இப்போதுள்ளதை விட மிக மிகக் குறைந்த செலவிலேயே மக்கட்சபைக்கும் சட்டசபைக்கும் தேர்தல்கள் நடக்குமாறு செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் பொறுப்புள்ள எவரும் போதிய கவனம் செலுத்தவில்லை. இது ஓர் அத்தியாவசியச் சீர்திருத்தம் என்று நான் நீண்ட நாட்களாக வற்புறுத்தி வருகிறேன். இந்தியாவில் நல்லாட்சி ஏற்பட வேண்டும் என நாம் விரும்பினோமாயின் இது உடனடியாகக் கவனித்தாக வேண்டிய, மிகவும் முக்கியமான நடவடிக்கையாகும். நாம் அரசாட்சியைப் பெரும்பான்மை பலமுள்ள ஒரு கட்சியிடம் தர நினைத்தாலும் சரி, அல்லது பல கட்சிகளின் கூட்டணியிடமோ, கட்சிச் சார்பே இல்லாத அடிப்படையிலோ, விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறையிலோ அமைக்க எண்ணினாலும் சரி — அதற்கு முன்கூட்டிச் செய்தாக வேண்டிய சீர்திருத்தம் இது. பெரும் செலவை ஏற்க முடியாத வேட்பாளர்களும் தேர்தலில் போட்டியிடுவதற்குச் சாதகமாக நாம் தேர்தல் முறையை மாற்றியாக வேண்டும். பணக்கார நண்பர்களையோ, பணக்காரக் கட்சிகளையோ சார்ந்திராதவரும் வேட்பு செய்வதற்குச் சௌகரியமாகத் தேர்தல் செலவைக் குறைக்க வேண்டும்.

எவ்வளவுக்கு எவ்வளவு தேர்தல் செலவுகள் உயருகின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அரசியல் கட்சிகளை வேட்பாளர் சார்ந்திருப்பதும் அதிகமாகிறது. இதனால் சட்டசபை அங்கத்தினர்களுக்கு மிகவும் அவசியமான சுதந்திரத்தை அவர்கள் இழக்க வேண்டியதாகிறது. பெர்மிட் லைசென்ஸ் ஆட்சிக்கும் ஆளும் கட்சிக்குமிடையே வளர்ந்து வருகிற தொடர்பை இங்கு விசேஷமாகக் குறிப்பிட வேண்டும். தேர்தல் செலவுகளை நாம் கணிசமாகக் குறைப்பதற்குச் சக்தி வாய்ந்த நடவடிக்கை எடுக்காவிடில் இந்தத் தொடர்பு இந்தியப் பொருளாதாரத்தின் நிரந்தர அங்கமாகி விடும். பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சியதிகாரத்தைக் கைக்கொண்டுள்ள கட்சி தன் சார்பில் தேர்தலுக்காக நிற்கக் கூடியவர்களுக்கென நிறைய நிதி திரட்ட முடியும்; மற்றக் கட்சிகளால் முடியாது.

ஒவ்வொரு தேசத்துக்கும் தனிப்பட்ட விசேஷ அம்சங்களுண்டு. வறுமை என்பது இந்தியாவின் விசேஷ அம்சம். ஏழை மக்கள் முடியாட்சி முறையிலேயேதான் திருப்தி அடைய வேண்டும் போலும்! ஆயினும் நாம் சாகச ஆசை கொண்டு பொதுத் தேர்தலின் அடிப்படையில் அமைந்த ஜனநாயக முறையை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். தேர்தல் செலவை மிகவும் குறைப்பதற்கு நமது அநுபவஸ்தர்களான நிருவாகிகள் வழி காணாவிடில் நமது சாகச ஆசை உண்மையில் பூர்த்தியாகாது. தேர்தலில் போட்டியிடுவதற்கு மற்றவர்களைப் பணம் யாசிக்காமலே பரம ஏழையும், தனது தகுதியின் அடிப்படையில் சட்டசபையில் ஸ்தானம் பெற வழி காண்பதற்காக நாம் வேறு பல நல்ல அம்சங்களைத் தியாகம் செய்யக்கூடத் தயாராக இருக்க வேண்டும் என்று கூறுவேன்.

இதுவரை நம் நாட்டில் பல பொதுத் தேர்தல்கள் நடந்துள்ளன. இவற்றில் பொதுவாக ஒரு வேட்பாளர் எவ்வளவு செலவு செய்ய வேண்டியிருக்கிறது என்பது குறித்த எல்லா விவரங்களிலும் சில ஓய்வு பெற்றுள்ள அதிகாரிகளும், தற்போது பதவி வகிக்கும் சில அதிகாரிகளும் நல்ல விஷய ஞானம் பெற்றுள்ளனர். இவர்கள் ஒன்றுகூடி ஆலோசித்து, தேர்தல் செலவைக் குறைப்பதற்கான வழிகளை ஆராய்ந்து தகுந்த திட்டம் வகுக்கலாம். தற்போது தில்லியில் ஆளுகிற கட்சி இது தனது அத்தியாவசிய — அதி அவசரப் பொறுப்புக்களில் ஒன்று என்ற உணர்வைப் பெற வேண்டும். தேர்தல்களுக்குப் பெருஞ் செலவு

தேவைப்படுகிற நிலவரத்தை நீடிப்பதால் தனது ஆட்சியை நீடிக்க முடியும் என்கிற சபலத்தை விட்டு இன்றைய ஆளும் கட்சி தேர்தல் சீர்திருத்தம் செய்ய வேண்டும்.

நான் பலமுறை எடுத்துக்காட்டியுள்ளது போல் இப்போது தேர்தலில் செய்யப்படும் செலவினங்களில் பலவற்றை அரசாங்கமே வேட்பாளர்களின் சார்பில் செலவு செய்ய வேண்டும். செலவுப் பளு வேட்பாளரிடமிருந்து சர்க்காருக்கு மாற்றப்படுமாறு நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். அதே சமயத்தில், ஆட்சியில் உள்ள கட்சியின் வசியங்களுக்கு வாக்காளர்கள் ஆளாகாமல் காக்க வேண்டியது நம் பொறுப்பு. ஆட்சி நடத்தும் நிர்வாக பீடத்திலிருந்து சுதந்திரம் பெற்ற தனியானதொரு சுயேச்சைக் குழு நிறுவப்பட வேண்டும். தேர்தல் நடவடிக்கைகளுக்கு இக்குழு பொறுப்பு|எடுத்துக்கொள்ள வேண்டும். இது கடினமான, காரியமல்ல. இன்று நீதி பரிபாலனத் துறையில் நாடு முழுவதற்குமே ஒரு சுதந்திர அமைப்பு இருப்பதைக் காண்கிறோம். இதே போல் தேர்தல்களை நடத்தவும் சுதந்திர அமைப்பு ஏற்படுத்துவதில் சிரமம் இராது.

நமது அரசியல் சாஸனத்தில் அரசியல் கட்சிகள் பற்றி ஒரு குறிப்புக்கூடக் கிடையாது என்பதை நினைவில் கொள்வோம். எனினும், கட்சி ஆட்சியை மேன்மேலும் ஆழமாக நிலைநாட்டுகிற போக்கையே காண்கிறோம். இதற்குமாறாக, சுதந்திரமான கருத்து வாய்ந்த அங்கத்தினர்கள் பொதுஜன ஆதரவு பெற்றுச் சட்டசபைகளில் இடம் பெறுவதற்கு நாம் உதவ வேண்டும். அங்கீகாரம் பெற்ற அரசியல் கட்சிகளின் மூலமே அங்கத்தினர்கள் சட்டசபையில் பிரவேசிப்பதால் விவகாரங்களை நடத்துவது நிர்வாகத்தினருக்குச் சுலபமாக இருக்கக் கூடும். ஆனால் சுலபமானது எதுவோ அது தான் எப்போதுமே தேச நலனுக்கும் திறனுக்கும் உகந்தது என்று சொல்லிவிட முடியாது. போதும் என்கிற அளவுக்கு அரசியல் கட்சிகளின் ஆட்சி முறையை நிறையப் பார்த்து விட்டோம். வேறெங்கெல்லாமோ கட்சி அரசியல் முறை நன்றாக நடந்திருக்கலாம். ஆனால் இந்தியாவில் அது சரியாக நடக்கவில்லை. இன்னும் நாள் ஆக ஆக அது சீர்திருந்தும் எனவும் தெரியவில்லை; மேன்மேலும் மோசமாகவே ஆகக்கூடும். வேட்பாளர்களின் எண்ணிக்கை குறைவாக இருப்பதால் தேர்தல்களை நிருவகிப்பது எளிதாகிறது என்பதற்காக, பணம் படைத்தவர் மட்டுமே தேர்தலில் கலந்துகொள்ளச் செய்து, வேட்பாளர்கள் தங்களைக் கட்சிகளிடம் விற்றுக் கொள்ளுமாறு செய்வது கொடூரம்; இது ஜனநாயகத்துக்கே விரோதம்; நெறி தவறியதுமாகும். எனவே, அரசியல் கட்சிகளிடமிருந்தும், பணம் கொழுத்தவர்களிடமிருந்தும் சுதந்திரமாக இருக்க விரும்பும் வேட்பாளர்களுக்கு உகந்தபடி தேர்தல் செலவைக் குறைப்பதற்காக அநுபவஸ்தர் குழு ஒன்று உடனே நியமிக்கப்பட வேண்டும்.

மற்ற காரணங்களுக்காக வேட்பாளரின் எண்ணிக்கை அதிகமாவது விரும்பத்தக்கதல்ல என்று கருதப்படுமாயின், இதற்கு ஒரு மாற்றுக் காணலாம். அதாவது ஒரு தேர்தலில் இரண்டுக்கு மேற்பட்ட வேட்பாளர் போட்டியிட்டால், வாக்காளர்கள் ஒருவருக்கு ஆதரவாக மட்டும் வோட்டுப் போடாமல், அவருக்கு முதல் வாக்கைத் தந்து அடுத்தபடியாகத் தாங்கள் விரும்புபவர்களையும் வரிசைப் படுத்திக் குறிப்பிடச் செய்யலாம். முடிவில் யாரும் கணிசமான முதல் வாக்குப் பெறாவிடில், வாக்காளர்களின் இரண்டாவது வாக்குகளையும் கணக்கிட்டு வெற்றி பெறும் வேட்பாளரைத் தேர்ந்தெடுக்கலாம். இவ்விஷயங்கள் யாவற்றையும் ஒரு நிபுணர் குழு முற்றிலும் ஆராய வேண்டும். வேட்பாளரின் செலவைக் குறைக்கும் முக்கிய நோக்கத்தை இக்குழு மறந்து விடக்கூடாது. அரசியல் என்பது பணம் படைத்த கட்சிகளுக்கும், பணம் படைத்தவர்களின் அடியார்களுக்கும் மட்டுமே உரித்தானது என்ற நிலை இருக்கக் கூடாது.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

# என்ன சேதி?

## சா. கணேசன் மணிவிழா

திரு சா. கணேசன் எம். எல். ஸி. அவர்களிடம் ஒரு பண்பு. அவர் அரசியலில் ஈடுபட்டிருக்கலாம். அல்லது வேறு எப்பணியிலாகிலும் ஈடுபட்டிருக்கலாம். அதனால் என்ன? அவர் மனம் மட்டும் கம்பனைச் சுற்றித்தான் வளைய வந்து கொண்டிருக்கும்.

சென்ற இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகக் காரைக்குடியில் அவர் நடத்தும் ''கம்பன் விழா'' தமிழ்கூறும் நல்லுலகம் முழுதும் பிரசித்தியடைந்துள்ளது. ஆண்டு தோறும் அவர் நான்கு நாட்கள் காரைக்குடியிலும் ஐந்தாம் நாள் நாட்டரசன் கோட்டையிலும் நடத்தும் விழா, கம்பனைப் பற்றிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நடத்தும் சர்வகலாசாலையாகவே திகழும். திரு சா. கணேசன் தேச விடுதலைப் போராட்ட காலத்தில் சிறையிலிருந்த போதும் காரைக்குடியில் கம்பன்விழா நடைபெற்றது. அப்படி அவர் மனத்துக்குகந்த பணியைச் செய்யும் ஆர்வம் கொண்ட நண்பர்களைப் பெற்றிருப்பது திரு சா. கணேசன் பெற்றிருக்கும் பேறுகளில் பெரும் பேறாகும். இப்பொழுதும் திரு சா. கணேசன் அவர்களின் மணிவிழாவை, அறுபதாண்டு நிறைவை, கம்பன் மணி மண்டபத் துவக்க விழாவாக நடத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள். அதுதான் சா.கணேசன் அவர்களுக்கு மகிழ்ச்சியூட்டும் பணியாகும்.

திரு சா. கணேசன் நாட்டுக்காக, தேச விடுதலைக்காக எல்லாவற்றையும் துறந்த

தியாகி. தியாகத்துக்கு விலை கூருத ஒழுக்க சீலர். அப்படிப்பட்டவரின் மணி விழாவில் பங்கு கொள்வது எல்லாருக்கும் பெருமை. அதனால் திரு சா. கணேசன் அவர்களை அரசியல் பணி மூலம் அறிந்தவர்களும், "கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்க்கும்" கணேசனுக அறிந்தவர்களும் கம்பன் மணிமண்டபப் பணி விரைவில் நிறைவுற எல்லா வகையாலும் உதவ வேண்டும். முக்கியமாகப் பொருளுதவி நல்க வேண்டும். தமிழக முதலமைச்சரும் பொதுப் பணித் துறை அமைச்சரும் மற்றும் பல பிரமுகர்களும் கொண்ட மணிவிழாக் குழு அமைக்கப்பட்டிருக்கிறது. அக்டோபர் மாதத்தில் மணிவிழா நடத்தக் கருதியிருக்கின்றனர். அதற்குள் ஒவ்வொருவரும், தங்களாலான நிதியுதவியைக் கீழே கண்ட விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறோம்.

அழ. அழகப்பன், செயலர், சா. கணேசன் மணிவிழாக்குழு, சத்தியமூர்த்தி இல்லம், காரைக்குடி — 1

## நினைவுச் சிலைகள்

நினைவுச் சின்னம், சிலைகள் எழுப்ப நம் நாட்டில் பெருத்த ஆர்வம் எழுந்துள்ள இச் சமயத்தில் பாகிஸ்தானிலிருந்து வரும் ஒரு செய்தியை இங்கு குறிப்பிட வேண்டும்.

"பாகிஸ்தானை உருவாக்கிய முகமதலி ஜின்னு, முதல் பிரதமர் லியாகத் அலிகான் இருவர் மட்டுமே நினைவுச் சின்னம் பெறுவதற்குத் தகுதி படைத்தவர்கள் என பாகிஸ்தான் அரசு கூறியுள்ளது.

"எல்லாத் தலைவர்களுக்கும் நினைவுச் சின்னங்கள் எழுப்ப அயூப்கான் அரசு உத்தேசிக்கவில்லை என்று பாகிஸ்தான் பொதுப்பணித் துறை மந்திரி தேசிய சட்டசபையில் தெரிவித்தார்."

## முதன்மந்திரி கோரிய பரிசு

மகாராஷ்டிர முதன்மந்திரி திரு வி. பி. நாயக், தமது பிறந்த நாள் கொண்டாட்டத்தின் போது, தமது ராஜ்ய மக்களை ஒரு விநோதமான பிறந்த நாள் பரிசு நல்குமாறு கேட்டுக் கொண்டார். அதாவது சிவசேனைக்காரர்களின் நடவடிக்கைக்கு அநாவசியமான விளம்பரம் கொடுக்காமல் இருக்கும்படி கேட்டுக் கொண்டார்.

சிவசேனைக்காரர்களின் நடவடிக்கைகளைக் கண்டிக்கத் தைரியமில்லை முதன்மந்திரி அவர்களுக்கு. எனினும் மக்களை அவர்கள் நடவடிக்கைகளைப் பற்றி வெளியே பேசாமல் இருக்கும்படி கேட்டுக் கொள்ள மட்டும் எப்படித்தான் துணிவு வருகிறதோ !

அரசாங்கம் காலிகளையும் 'குண்டர்'களையும் கண்டு பயப்படத் தொடங்கி விட்டால், மக்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!

## ராஜமான்ய விஷயம்

முன்னுள் சம்ஸ்தானாதிபதிகளின் ராஜமானியத்தை நிறுத்திவிட வேண்டும் என்று அ. இ. கா. க. விவாதம் நடத்தியபின் ஸ்ரீ மொரார்ஜி தேசாய், முன்பு சம்ஸ்தானங்களின் ஆட்சியை எடுத்துக் கொண்ட போது சர்க்கார் அவர்களுக்குத் தந்த வாக்குறுதியைக் காக்க வேண்டும் என்ற தம் கருத்தை மீண்டும் வலியுறுத்தியுள்ளார். சென்ற ஆகஸ்டில் தில்லியில் கூடிய அறுபது முன்னுள் மன்னர்கள் பழைய வாக்குறுதியை அற்றுப் போகச் செய்யும் முயற்சியை ஏகமனதாகக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றினர். "இவ் விஷயத்தில் பட்சபாதம் ஏதுமின்றி உண்மையை ஒட்டிக் கண்ணேட்டம் செலுத்தப்படும் என்று தாங்கள் நம்புவதாகவும் தெரிவித்தனர். இப்போது காங்கிரஸ் வட்டாரத்தில் நடப்பதைப் பற்றிப் பத்திரிகைகளுக்கு அனுப்பப்படும் அறிக்கைகளைப் பார்க்கும் போது, வாக்குறுதியை உடைத்தெறிகிற திட்டத்தை உடனடியாக, பூரணமாகக் கைவிடுவார்கள் என்று தோன்றவில்லை. வாக்குறுதியைப் பல தவணைகளில் சிறுகச் சிறுக உடைப்பதற்கான புதுத் திட்டம் ஆலோசிக்கப்படுவதாகவே தெரிகிறது.



### காமகோடியின் கருணைமொழி

சமூகத்துக்கோ, ராஜ்யத்துக்கோ, ஒரு வர்க்கத்துக்கோ தலைவர்களாக இருப்பவர்கள் சமய அநுஷ்டானங்களையும் ஆசாரங்களையும் புறக்கணிக்கலாகாது. தனிப்பட்ட முறையில் அவர்களுக்கு சமயச் சடங்குகள் தேவையாக இல்லாதிருக்கலாம். ஆன்மிகத்தில் அவர்கள் முன்னேற்றம் கண்டு சமய அநுஷ்டானங்களைப் பின்பற்றும் அவசியத்தைக் கடந்திருக்கலாம். என்றாலும் அவர்கள் அநுஷ்டானங்களை விட்டு விட்டால், இந்த அநுஷ்டானங்களின் உதவியை உண்மையாகப் பெற வேண்டிய நிலையிலுள்ள மற்ற மக்களும் இவற்றை அலட்சியம் செய்யத் தொடங்கி விடுவர். இதனால் தலைவர்கள் மக்களுக்குத் தவறான உதாரணம் காட்டியதாகவே ஆகும். **மக்கள் எந்த நிலையில் இருக்கிறார்களோ அங்கிருந்தே** அவர்களை முன்னுக்கு அழைத்துச் செல்ல வேண்டியது தலைவர்களின் கடமையாகும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் என்ற முறையில் மட்டுமின்றி, தேர்தல் பிரசாரத்தில் பிரத்தியேகமாகத் தாம் எடுத்துக் கொண்ட தீவிர ஈடுபாடு காரணமாகவும் திரு சி. சுப்பிரமணியம் தென்காசித் தேர்தலில் தி. மு. க. அரசாங்கத்துக்கு எதிராகக் காங்கிரஸ் அடைந்த படுதோல்விக்கு முக்கியப் பொறுப்பை ஒப்புக் கொள்ள வேண்டும். இது தனிப்பட்ட முறையிலும் சரி, கட்சி அடிப்படையிலும் சரி மிகவும் மகத்தானதொரு தோல்வியாகும். மறுபுறத்தில் பார்த்தால் இது திரு அண்ணாதுரையின் பிரத்தியேக குணங்களுக்கும் அவரது பண்பாட்டுக்கும் ஒரு மகத்தான வெற்றி. அதோடு அவரது நிருவாகம் கோரும் உரிமைகள் நியாயமானவை என்பதையும் இந்த வெற்றி நிரூபித்துள்ளது. தி.மு.க. அதிகாரம் பெற்றிருப்பதால் செய்துள்ள தலையீடு அதன் வெற்றிக்கு எவ்வளவு தூரம் காரணமாகும் என்பதை விசாரணை செய்ய வேண்டும் என்கிறார் திரு சுப்பிரமணியம். காங்கிரஸ் ஆட்சி பீடத்தில் இருந்தபோது — அல்லது 'திரு காமராஜ் ஆட்சி புரிந்த போது' என்று சொல்வது அதிகப் பொருத்தம் — சர்க்காரின் அதிகாரம் தேர்தல்களில் பிரயோகிக்கப்படவில்லை என்று திரு சுப்பிரமணியம் பாசாங்கு செய்கிறாரா? தமிழ்நாட்டில் முன்பு ஆட்சியில் இருந்த காங்கிரஸும், காங்கிரஸ் மந்திரிகளும் முனிவர்களாக இருந்ததாக எண்ணுமளவுக்குத் திரு சுப்பிரமணியம் மயங்கியிருக்க மாட்டார் என்பது நிச்சயம். அல்லது, காங்கிரஸ் ஆட்சி நடத்தியபோது மந்திரிமார்களிடமிருந்து சுதந்திரமாகத் தனித்திருந்த அதிகாரிகள் இப்போது திடீரென்று மந்திரி சபைக்கு அடிமைப்பட்டு விட்டதாகவும் அவர் எண்ணுவதற்கில்லை.

இத் தேர்தலில் கட்சிகள் சாதி அடிப்படையில் பிரசாரம் செய்யாவிடினும், அந்த அடிப்படையிலேயே சிந்தித்துக் கணக்குப் போட்டு வந்தன. இந்தக் கணக்கின்படி வெற்றியோ தோல்வியோ ஆயிரம் அல்லது இரண்டாயிரம் வாக்குகள் வித்தியாசத்திலேயே அமையும் என்று இரு தரப்பினரும் நினைத்து வந்தனர். ஆனால் வாக்காளர்களோ சாதிச் சிந்தனையை அடியோடு அகற்றிவிட்டுத் தாங்கள் காங்கிரஸ் ஆட்சிக்கு இந்த ராஜ்யம் திரும்புவதை விரும்பவில்லை என்று 23000 வாக்குகள் வித்தியாசத்தின் மூலம் தெளிவாகத் தீர்ப்புத் தந்துவிட்டார்கள்.

ஃஃஃ

உயர் வகுப்புக்களில் போதிக்கும் பயிற்று மொழி பற்றிப் பல முறை சொன்னதைத் திரும்பவும் கூறுகிறேன். ஆங்கிலத்தையோ அல்லது பிரதேச மொழியையோ போதனை மொழி என்று அதிகார பூர்வமாக ஏற்படுத்திவிடலாம். ஆனால் இது காரணமாக, பாடத்தை விளக்குகையில் ஆசிரியர் ஆங்கிலத்திலிருந்து பிரதேச மொழிக்கு மாற்றிக் கொள்ளவோ பிரதேச மொழியிலிருந்து ஆங்கிலத்துக்கு மாற்றிக்கொள்ளவோ தடை ஏதுமில்லை. தேவையை உத்தேசித்து விளக்கத்தைப் பிரதேச மொழி அல்லது ஆங்கிலத்தில் மாற்றி மாற்றித் தரலாம். போதனை என்பது ஆசிரியர் ஒருவரே செய்யும் வறட்சியான பேச்சாக இருக்கக் கூடாது. ஆசிரியரும் மாணாக்கரும் உரையாடுவதாகவும், கேள்வி கேட்டுப் பதில் சொல்வதாகவும் இருக்க வேண்டும். பொருளைச் சுத்தமாகவும் சக்தி வாய்ந்த முறையிலும் மாணாக்கருக்குப் புரிய வைப்பதே இலட்சியம். வாராந்தரமாகவோ, மாதமிருமுறையோ, வேறு காலாந்தரத்திலோ அவ்வப்போது பரீட்சைகள் வைக்கும் போது பிரதேச மொழியில் கற்றதை ஆங்கிலத்திலும், ஆங்கிலத்தில் கற்றதைப் பிரதேச மொழியிலும் மாணாக்கர்கள் எழுதும்படி செய்தால் இப்பரீட்சைகளுக்கு இரட்டிப்புப் பயனுண்டு.

ஃஃஃ

தற்காலத்தில் ஆத்மிகத்தில் மிகுந்த நலிவு ஏற்பட்டுள்ளதெனினும், இன்னும்கூட சில உத்தமர்கள் மக்களின் நெறியை உயர்த்த உத்வேகத்துடன் பாடுபட்டு வருகிறார்கள். சமூகம் அதருமத்தில் ஆழ்ந்துவிடக் கூடாது என்பதற்காக அந்தரங்கசுத்தியுடன் உழைப்பவர்கள் இன்றும் உள்ளனர். ஆனால் இப்படிப்பட்டவர்களுக்கும் ஓர் உட்பகை உள்ளது. தாங்கள் பிரசித்தி பெற வேண்டும், அதிகாரம் பெற வேண்டும் என்ற ஆசையே இந்த உட்பகை. இதனை இவர்கள் வென்றாக வேண்டும். ஆன்ம ஆசிரியனாவதற்காகப் புத்தர் தமது ராஜபோகங்களையெல்லாம் தியாகம் செய்தார். அதிகாரத்தை விட்டுவிட வேண்டும் என்று துடித்தவர் அவர். இதில் தமது உறுதியை மற்றவருக்கும் போதித்தார். இதற்கு நேர்மாறாக, இன்று மக்களுக்கு ஆசாரியராக விளங்கக் கூடியவர்கள் நவீனப் பிரசார முறைகளின் மூலம் பிரசித்தி பெற விரும்புவதைக் குறித்து எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பிரசித்தி பெறும் ஆசையால் இவர்கள் தமது லட்சியத்தில் வெற்றி காண முடியாது. புகழ் என்பது நல்ல காரியத்தின் வெறும் நிழலே. அது ஆசாரியர்களைத் தேடி அவர்களின் பின் ஓட வேண்டுமேயன்றி, ஆசாரியர்கள் அதனைத் தேடி அதன் பின் ஓடலாகாது.

---

தன் தங்கையை முதுகில் சுமந்து கொண்டிருக்கும் இந்தச் சிறுவன் பிற்கால வாழ்க்கையில் தான் எதிர் நோக்கப் போகும் எல்லாச் சுமைகளையும் இதே பெருமிதத்துடன் தாங்குவேன் என்று சொல்லுகிறான்? பாசத்தினால் இப்பொழுது சுமை தெரியாமல் இருப்பதுபோல் பிற்காலத்தில் கடமையுணர்வு சுமையை இலேசாக்கிவிடும் என்று சொல்கிறான்?

பொருளடக்கப் பகுதிக்குப் படம் அனுப்பியவர்: **பிரேமா ஹரிஹரன்**




உங்கள் உடைக்குப் பொருத்தமான

# நெயில் பாலிஷை

தேர்ந்து எடுங்கள்
(40 கலர்களில்)

எல்லா பிரபல ஸ்டோர்களிலும் கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்.

*தயாரிப்பாளர்கள் :*

**ஷெபுஞ்ச் பியூட்டி லாப்ஸ்**
பம்பாய் - 69

*சென்னை ஏஜெண்டு :*

**பிரண்ட்ஸ் ஏஜென்ஸிஸ்**
3, மலையபெருமாள் தெரு, சென்னை - 1
போன் : 25999

# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 20-00 | 10-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40-00 | 20-00 |
| | இலங்கை நாணய மதிப்புப்படி | |
| இலங்கை | 21-00 | 10-50 |

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

*மானேஜர் :*

கல்கி காரியாலயம் :: சென்னை - 10

# THE NEW INDIA INDUSTRIES LTD.

*Registered Office :* Jetalpur Road, BARODA

*Makers of*  *Photo Paper*


BROVIRA - for enlargements
LUPEX - for contact prints
AGFASTAT - for documents copying (camera)
COPEX - for document copying (contact)

*In collaboration with :*

M/s. AGFA - GEVAERT AKTIENGESELLSCHAFT, LEVERKUSEN, West Germany

*Factory :*
Bombay Agra Road
Mulund, BOMBAY-80

*Bombay Office :*
Industrial Assurance Buildings
Opp. Churchgate Rly. Station, BOMBAY-1

# கல்லூரி மாணவர்களுக்கு.....





கல்கி பத்திரிகை தனது இருபத்தேழாண்டு இலக்கியப் பணியைப் பூர்த்தி செய்து இருபத்தெட்டாம் ஆண்டில் அடியெடுத்து வைக்கவிருக்கிறது. இந்த நன்னாளையொட்டி இதோ கல்லூரி மாணவ, மாணவியரின் இலக்கிய உணர்வு வளர உதவும் வகையில் ஒரு போட்டி:

ஆகஸ்டு 4ந் தேதி இதழ் முதல் டிசம்பர் இறுதி இதழ் வரையில் கல்கிப் பத்திரிகையில் இடம் பெறும் எல்லாச் சிறப்புச் சிறுகதைகளையும் ஆழ்ந்து படித்துப் பாருங்கள். அவற்றில் சிறந்ததென நீங்கள் கருதும் ஏதேனும் ஒரு சிறப்புச் சிறுகதை குறித்து கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத வகையில், இலக்கியத் திறனாய்வு செய்து எமக்கு 1969 ஜனவரி 15ந் தேதிக்குள் கிடைக்குமாறு அனுப்பி வையுங்கள். சிறந்த இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகளுக்கு முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகள் உண்டு. முதல் பரிசு: அடுத்த கல்லூரி ஆண்டுக்கான முழு சம்பளத் தொகை. இரண்டாம் பரிசு: இரண்டு 'டர்ம்' (Term)களுக்கான சம்பளத் தொகை. மூன்றாவது பரிசு: ஒரு 'டர்ம்' சம்பளத் தொகை. பரிசுத் தொகை கல்லூரி முதல்வருக்கு அனுப்பி வைக்கப்படும்.

திறனாய்வுக்குச் சிறப்புச் சிறுகதைகளை மட்டும் எடுத்துக்கொள்ளுங்கள். உறையின் மீது 'இலக்கியத் திறனாய்வுக் கட்டுரை' என்று குறிப்பிட்டு, ஆசிரியர், கல்கி, சென்னை–10 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். அடுத்த ஆண்டு கல்லூரிப் படிப்பைத் தொடர நினைப்பவர்கள் மட்டுமே இப்போட்டியில் கலந்துகொள்ளவும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது. கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கல்கி ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.



# பூவுலகில் ஒரு சொர்க்கம்

அனல் பறக்கும் தில்லி வெய்யிலிலிருந்து விடுதலை பெற எண்ணிப் பனி அடர்ந்த காஷ்மீரத்துக்குச் சென்று வந்த குமாரி சீதா லட்சுமி, அவரது தோழிகளின் அனுபவம் இது. காஷ்மீரத்துக்குப் போவதற்குத் தேவைப்படும் அத்தியாவசிய சாமான்கள்: கம்பளிப் போர்வை, மழைக்கோட்டு. கம்பளி



உடைகள், வடஇந்திய உணவான சுக்கா ரொட்டி, குல்கா, சப்ஜி முதலியவற்றை ஜீரணிக்கத் தகுந்த வயிறு.

தலைநகரில் 'ஜம்மு காஷ்மீர் பஸ் சர்விஸ்' காஷ்மீர் செல்வதற்கான டிக்கெட்டுகளை வழங்குகிறது. போக வர ஓர் ஆளுக்கு ரூ. 52 ஆகிறது. இவர்கள் சென்ற வழியில் ரோமாஞ்சம் ஏற்படுத்தும் ஒரு நிகழ்ச்சி :

'ரம்பன்' என்னுமிடத்தில் 'உய்'யென்ற பெருவேகத்துடன் காஷ்மீரத்துக்கு வந்திருக்கும் இளம் பிரயாணிகளை வரவேற்றது 'ஜில்' லென்றிருந்த பனிப் புயல். வள்ளல்களாக மாறிப் பனிப்பாறைகளை வாரி வழங்கின. பஸ் நின்று விட்டது. பனிப் புயலைத் தொடர்ந்து ஏற்பட்டது நிலச் சரிவு. சடசடவென்று மணலும், பாறையுமாய் பஸ் முன் குன்றுகக் குவிந்து விட்டன.

மூன்று மணி நேரம் பஸ்ஸினுள் அடைந்து கிடக்க நேரிட்டது. பின் கனமான 'புல்டோஸர்' யந்திரங்கள் அங்கு வந்து திடீரென ஏற்பட்ட மணல் மலையை அகற்றின. பனிமழையால் பாதைகளும் குறுகலாகிவிட்டன. இப்பொழுது இவற்றில் பஸ் செல்லும் போது அப்பப்பா ! ஒரு பக்கம் நெடிதுயர்ந்த மலை. மறு பக்கமோ நெஞ்சை நடுங்க வைக்கும் கிடுகிடு பள்ளத்தாக்கு. உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு செல்லும் பிரயாணிகளின் உள்ள வலுவைச் சோதிப்பதேபோல் நின்றது 'நேரு டன்னல்!'

சுமார் இரண்டு மைல் நீளமுள்ள இம்மலைக் குகை வழியாகப் பஸ் செல்லுவது அதிர்ச்சியையும், ஆனந்தத்தையும் ஒருசேர அளிக்கிறது. உள்ளே உறைபனி. அஸ்திரங்கள் போல் தொங்கும் கூரான பனி அம்புகள். கசிந்து கொட்டி மெல்லிய சலசலப்புடன் விரையும் தண்ணீர் தாரைகள் !



ஸ்ரீநகரில் பிரயாணி விடுதிகள் அளவற்ற பிரயாணிகளுக்கு அடைக்கலம் அளிக்கின்றன. விடுதியினுள் இடம் இல்லாவிடினும், வெளியே கூடாரங்கள் அமைத்துத் தரு

கின்றனர். இவற்றில் இரண்டு கட்டில்கள் போடப்படுகின்றன. தங்கலாம். ஆனால், குளிக்கும் வசதிகள் இராது.

காஷ்மீரத்தில் காண வேண்டிய முக்கிய இடங்களுக்கான டிக்கெட்டுகளை அங்குள்ள 'பிரயாணி விடுதி'களில் முன்கூட்டியே பதிவு செய்து பெற்றுக் கொள்ளலாம்.

நேரு பூங்காவைச் சுற்றிக் காணப்படுவது சுமார் பதினன்கு மைல் சுற்றளவுள்ள 'டால் ஏரி'. இவ்வேரியின் நீரில் அன்னமென மிதந்து வரும் போக்குவரத்துப் படகுகளின் பெயர் 'ஷிகாரா'. ஷிகாராவில் ஏறி டால் ஏரியின் வனப்பான இடங்களைக் காணச் செல்லலாம். கட்டணம் தலைக்குப் பன்னிரண்டு ரூபாய். நேரக் கெடு கிடையாது. ஆனந்தமாக ஏரியில் மிதந்தவாறு இயற்கை எழிலை ரசிக்கலாம்.

'ஷிகாரா'வில் செல்லும்போதே நமக்கருகே மிதந்து வரும் படகுகளிலிருந்து அன்றலர்ந்த மலர்களின் சுகந்தத்தை அநுபவிக்கலாம். வளைந்த கொக்கிகளைக் கொண்டு தாமரைக் கிழங்கைச் சிலர் நீரின் அடியிலிருந்து எடுத்தெறிவார்கள். இந்தக் கிழங்கிலிருந்து வாய்க்குச் சுவையான வற்றல் தயாரிக்கிறார்கள்.

காஷ்மீரிகள் உபயோகப்படுத்துவது 'போனி'கள் எனக் கௌரவமாக அழைக்கப்படும் கோவேறு கழுதைகள். ரயிலில் உள்ளது போல் தரத்துக்கேற்ப போனியிலும்



முன்பக்கம் : 1. காஷ்மீரின் அழகுமிக்க டால் ஏரி.

2. ஷிகாரா.

இந்தப் பக்கம் : நாகின் ஏரியில் உல்லாசப் பிரயாணிகள் களிப்புடன் குடியிருக்கும் படகு வீடுகள்.

2. குல்மார்க்கில் 'போனி' சவாரி.

முதல், இரண்டாம், மூன்றும் வகுப்புக்கள் உண்டு. போனி சவாரி செய்து குல்மார்க் சென்று திரும்பலாம்.

முகலாயர்கள் சமைத்த பூங்காக்கள் காஷ்மீரைப் பூலோக சொர்க்கமாக உருமாற்றுகின்றன. பார்க்க வேண்டிய ஒய்யாரத் தோட்டங்கள் மூன்று. ஐந்தரை மைல் சுற்றளவு உள்ளதும், ஷாஜஹான் சமைத்ததுமான சாஷ்மா ஷாஹி ஒன்று. 'நிஷாத்' நூர்ஜஹானின் சகோதரர் அமைத்தது. இதன் சுற்றளவு இரண்டரை மைல். ஷாலிமார் எனப் புகழ் பெற்ற 'காதலர்சொர்க்கம்' இரண்டு மைல் சுற்றளவு உள்ளது. ஜஹாங்கீரின் கலைவண்ணம் இங்கு பரிமளிக்கிறது. பொங்கு புனல்கள், வண்ண வண்ண இளந்தளிர் ரோஜாக்கள், சிறகடித்துப் பறக்கும் எழில் மிகு பறவைகள், பசுமையான புல்வெளிகள்..... எவ்வளவு அழகு, எவ்வளவு நேர்த்தி!

சோனுமார்க் என்னுமிடத்தில் ஓடும் நதியின் நீர் ரத்தத்தையே உறைய வைக்கும் குளிர் நீராக இருந்தது. இந்நதியில் வர்ணக் கற்கள் பலவற்றைக் காணலாம். ஆனால் அவற்றை வெளியில் எடுத்து வந்து சில மணி நேரம் வைத்திருந்தால் அவை நிறமிழந்து பொலிவிழந்து காணப்படுகின்றன.

### சண்டை நிறுத்தம்!



காஷ்மீரில் ஒரு வேடிக்கை. அங்கு வாழும் பெண்கள் சண்டை பிடிப்பதில் ஒரு தனித் தன்மையைக் காணலாம். ஒருத்தி மற்றவளைத் திட்டிக்கொண்டிருப்பாள். திடீரென்று எழுந்து ஒரு கூடையைக் கவிழ்த்து வைத்துவிட்டு வீட்டினுள் சென்று தன் வீட்டு வேலைகளில் ஈடுபட்டுவிடுவாள். வேலை முடிந்ததும் வெளியே வந்து கூடையை நிமிர்த்திவிட்டு மறுபடியும் சண்டையை ஆரம்பித்து விடுவாள். ஒருத்தி கூடையைக் கவிழ்த்துவிட்டால், எதிராளியும் அப்போதைக்குச் சண்டையை நிறுத்திவிட்டுத் தானும் தனது வேலையைக் கவனிக்கப் புறப்பட்டு விடுவாள்.

தகவல்: ஆர். எம். ராமநாதன்

நேரு பிரயாணி இல்லத்தின் பின்புறம் குன்றில் அமைந்துள்ளது சங்கராசாரியாரின் திருக்கோயில். இம்மலை உச்சியிலிருந்து காஷ்மீரத்தின் தோற்றமனைத்தும் கண்டு ரசிக்கலாம்.

பஹால்காமில் 'பூர்ணிமா' குஜராத்தி ஹோட்டலில் பூரி, தோசை, இட்லி என்று நமது உணவு வகைகளை ஆசை தீர உண்ணலாம். பஹால்காம் செல்லும் பிரயாணிகளின் முகம் குங்குமப் பூவாய்ச் சிவந்து விடுகிறது. குளிர்ச்சியான பிரதேசம் என்பது மட்டுமல்ல; இங்கு கிடைப்பது அசலான காஷ்மீரத்துக் குங்குமப் பூ! இவற்றை விற்கும் வியாபாரி அசலுக்கும், நகலுக்கும் உள்ள வேறுபாட்டை அநாயாசமாக விளக்குகிறார். வேற்றுமையை விளக்கப் பயன்படுவது ஒரு வகைத் திராவகம். போலியை அத்திராவகத்தில் இட்டபோது அது கரிந்து உருவிழந்து போயிற்று. ஆனால் அசலை அதில் போட்டபோது அது புடமிட்ட தங்கம் போல் பூரணப் பொலிவுடன் விளங்கியது. காஷ்மீருக்குப் போய்ச் சில நாட்களை ஆனந்தமாகக் கழித்த குமாரி சீதாலட்சுமி கோஷ்டியாருக்கு அங்கு பிடிக்காத ஒரே ஒரு விஷயம்: அங்கிருந்து டில்லிக்குத் திரும்புவது!

பேட்டி: **என். ராஜாமணி**

---

அட்டைப்பட விளக்கம்

# குழந்தையும் கல்வியும்

**தம்மின் தம்மக்கள் அறிவுடைமை — மாநிலத்து**
**மன்னுயிர்க் கெல்லாம் இனிது.** — குறள்

இவ்விதழ் அட்டைப் படத்திலே இரண்டு குழந்தைகள், மடியில் ஏதோ ஒரு வண்ணப் பத்திரிகையை வைத்துக் கொண்டு, மேலட்டைச் சித்திரத்தைப் பூவிரல்களால் சுட்டிக் காட்டிப் பேசி மகிழ்வதைக் காணும்போது அவர்களது ஆர்வத்தை ஒருவாறு புரிந்து கொள்ளலாம். இந்த ஆர்வமே நாட்டின் செல்வம். எதிர்காலத்தில் மாபெரும் விஞ்ஞானிகளாகவும், பொறி இயல் நிபுணர்களாகவும், ராஜதந்திரிகளாகவும் மலர இந்த ஆர்வ மொட்டைப் பேணிப் பாதுகாக்க வேண்டும். அதற்குப் பதில் அடிநாளிலேயே கிள்ளிவிட்டால் தேசம் அடையும் நஷ்டம் கொஞ்சமல்ல.

ஆனால் இப்பொழுதெல்லாம் குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களில் — கிண்டர் கார்டன் வகுப்பிலிருந்து மேலே கல்லூரி வகுப்பு வரை — சேர்க்கப் பெற்றோர்கள் படும் பாட்டைப் பார்க்கும்போது ஒவ்வொரு தந்தையுமே குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்துக்கு முதல் ஆதரவாளர்களாக மாறிவிடுவார் போலிருக்கிறது! இந்தச் சூழ்நிலை மாற வேண்டும். சுதந்திர பாரதத்தில் பிறந்த ஒவ்வொரு குழந்தைக்கும் தரமான கல்வி பெற நல்ல வாய்ப்பு உண்டு என்ற நிலை வரவேண்டும்.

பெற்றவர்களுக்குத் தங்களைவிடத் தங்கள் புதல்வர்கள் அறிவுடையவர்கள் என்று கேட்கும்போது அளவிடற்கரிய மகிழ்ச்சியுண்டாகிறது என்கிறார் குறளாசிரியர். இந்த மகிழ்ச்சியை ஒவ்வொருவரும் பெற அரசாங்கம் உதவவேண்டும். வண்ணப்படம்: **வித்யாவ்ரதா**





## ஆந்திரத் தலைநகரில் ஆசாரியாள்



இவ்வாண்டு ஆதி சங்கர ஜயந்தி, ஸ்ரீ காமகோடி பீடாதிபதியின் ஜயந்தி இரண்டுமே ஸ்ரீ ஆசாரிய ஸ்வாமிகளின் திருமுன்னர் கொண்டாடப்படும் பாக்கியம் ஆந்திரத் தலைநகரான ஹைதராபாத்துக்குக் கிடைத்திருக்கிறது. இப்போது ஸ்வாமிகள் வியாஸ பூஜை நடத்தி, சாதுர்மாஸ்யம் அனுஷ்டிக்கும் பாக்கியமும் ஹைதராபாத்துக்கே கிடைத்துள்ளது. இச்சமயத்தில் ஹைதராபாத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் கலந்துகொண்டு அநுக்கிரகித்த பலப்பல நிகழ்ச்சிகளில் சிலவற்றை நினைவு கூருகிறோம் :

1. மே 13உ பெரியவர்களது 75வது ஜயந்தி அன்று மலர் மாலைகளுக்கும் சொல் மாலைகளுக்கும் பதில் அளிக்கிறார். 2. செகந்திராபாத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர் மந்திர் சங்கு ஸ்தாபன விழாவில் பெரியவர் அருள்வாக்கு. 3. ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கர் மந்திர் சங்கு ஸ்தாபன விழாவில் ஆந்திர மாநில விஜிலன்ஸ் கமிஷனர் ஸ்ரீ கே. என். அனந்தராமன் ஐ. ஸி. எஸ்.ஸுக்கு ருத்ராக்ஷ மாலை அனுக்கிரகித்தல். 4. 'வித்வத் ஸதஸ்' முடிந்து வேத பண்டிதர்களுடன் புதுப் பெரியவர்கள்.







# விஞ்ஞானிகள் வரிசை





# உலோக விஞ்ஞானம்

ஆதி நாளிலிருந்தே மனிதன் உலோகங்களை உபயோகப்படுத்தியிருக்கிறான் என்பதை நாம் பல வகையாலும் அறிகிறோம். இரும்பு, பொன், வெள்ளி என்று எத்தனையோ வகை உலோகங்களை உபயோகப்படுத்தியிருக்கிறான்.

இப்படி ஆதிநாளிலிருந்தே உலோக ரஸாயனம் எப்படி எப்படியெல்லாமோ வளர்ந்து வந்திருக்கிறது. தொழில் துறையில் ஒவ்வொரு வகை முன்னேற்றத்தைக் காணும் போதும் உலோகங்களிலும் புதுப் புது முன்னேற்றங்கள் செய்ய நேரிடுகிறது! ஆகவே இது முடிவில்லாத ஆராய்ச்சிக்கு வாய்ப்பளிக்கும் கலையாகும். இதில் மிகுந்த ஆர்வம் காட்டி, பல ஆராய்ச்சிகள் புரிந்து இந்தத் துறையில் ஈடுபட்ட உலக விஞ்ஞானிகளின் பாராட்டுதல்களையும் நன்மதிப்பையும் பெற்றிருப்பவர்: டாக்டர் தஞ்சாவூர் ராமச்சந்திரன் அனந்தராமன் ஆவார்.

அவர் 1927ல் தஞ்சாவூரில் பிறந்தார். தகப்பனார் ஓர் உயர்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர். தந்தைக்கு சம்ஸ்கிருதத்திலும் வேதசாஸ்திர விசாரணையிலும் நல்ல பாண்டித்தியம் உண்டு. அதன் விளைவாகப் பள்ளியில் விஞ்ஞானக் கல்வியில் ஆர்வமும் வீட்டில் நமது வேத சாஸ்திரங்களில் நல்ல பயிற்சியும் ஏற்பட்டது. எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் அவர் மாகாணத்திலேயே முதல்வராகத் தேறினார். அதில் மட்டுமல்ல, இண்டர், பி. எஸ்ஸி. (கெமிஸ்டிரி ஆனர்ஸ்) பரீட்சைகளிலும் முதல் மாணவராகத் தேறி உலோக ரசாயனத்தில் எம். ஸி. படிப்புக்குத் தகுதி பெற்றார். 1949ல் அவர் பெங்களூரில் மெட்டலர்ஜி படிக்கும் மாணவராக இருந்தபோதே இங்கிலாந்திலுள்ள நஃபீல்டு கழகத்தின் உபகாரச் சம்பளம் கிடைத்தது. இரண்டு ஆண்டுகளுக்குப் பின் ஆக்ஸ்போர்ட் சர்வகலாசாலையில் பிரசித்திபெற்ற டாக்டர் டபிள்யூ. ஹயூம் ரோதரே எம்..ஆர்.எஸ். அவர்கள் தலைமையில் அங்குள்ள ஆராய்ச்சிக் கூடத்தில் டாக்டர் பட்டம் பெற ஆராய்ச்சி புரிய ரோட்ஸ் உபகாரச் சம்பளம் அனந்தராமனுக்குக் கிடைத்தது !

அவர் ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலையில் இருந்தபோது, தமது ஆராய்ச்சிப் பணியுடன் நின்றுவிடாமல், செஸ், டேபிள் டென்னிஸ் போட்டிகளில் கலந்து கொண்டார். மாணவர் மன்றத் தலைவரானார். மாணவர் பட்டி மன்றங்களில் கலந்து கொண்டு சமயநெறியும், சமய வாழ்வும் அவசியம் என்று வற்புறுத்துவார். போலந்தில் நடைபெற்ற உலக மாணவர் மகாநாட்டுக்குப் பிரதிநிதியாகச் சென்று, கம்யூனிஸ்ட் நாட்டு மாணவர்கள் மதத்தையும் தெய்வநெறியையும் கண்டித்தபோது இவர் வன்மையாகத் தெய்வ பக்தியை ஆதரித்துப் பேசினார்.

இந்தியாவுக்குத் திரும்பியதும் பெங்களூரில் ஆறு ஆண்டுகள் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆப் ஸயன்ஸில் துணைப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். பின்னர் 1962லிருந்து காசியிலிருக்கும் ஹிந்து சர்வகலாசாலையின் மெட்டலர்ஜி பிரிவில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

டாக்டர் அனந்தராமன் அவர்களின் சிறப்பான உலோக ஆராய்ச்சியைப் பாராட்டும் வகையில் இந்திய அரசாங்கத்தின் எஃகு உலோக மந்திராலயம் 1964-ம் ஆண்டு, "இந்த ஆண்டின் உலோக ஆராய்ச்சி நிபுணர்" என்ற கௌரவ பட்டத்தை வழங்கியது !

அவர் மேனாடுகளுக்குப் போகும்போதெல்லாம் கீதைப் பிரவசனங்களும் செய்வதுண்டாம். கீதையைப் பற்றி அவர் நிகழ்த்திய சில உரைகள் மேற்கு ஜெர்மனியில் புஸ்தகமாக வெளியாகியிருக்கின்றன.

கீதை, உபநிஷதங்கள் தவிர விநோபாஜியின் சர்வோதய இயக்கத்திலும் அவருக்குப் பற்று உண்டு. அவருக்கு மனைவியாக வாய்த்தவர் ஒரு ஜெர்மானியர். மனைவிக்கும் சர்வோதய இயக்கத்தில் பற்றுண்டு. வினோபாஜியுடன் அவர் ஓராண்டு காலம் பாத யாத்திரை புரிந்திருக்கிறார். வினோபாஜி குஜராத்தில் பாத யாத்திரை செய்து கொண்டிருந்தபோது தான், திரு அனந்தராமனுக்கும் இந்த ஜெர்மானியப் பெண்மணிக்கும் 1958ல் திருமணம் முடித்து வைத்தார். இரண்டு புதல்வர்கள் இருக்கிறார்கள்.

ஆதாரம்: "ஹிந்து"



# வண்ணத் திரையில் விவிலிய நூல்

‘உலகம் தோன்றியது எப்படி?’

இந்த வினாவுக்கு ஆராய்ச்சியாளர்களின் எத்தனையோ விளக்கங்கள் உள்ளன. விவிலிய நூலில் கூறியுள்ளபடி இவ்வுலகம் தோன்றிய விந்தையைக் கண் முன் காட்சிப் பொருளாக நிஜமாக்கிக்காட்டும் அற்புதத்தை ‘தி பைபிள்’ என்ற படம் சாதித்திருக்கிறது.

உருகி ஓடும் அனல் குழம்பு, ஓயாது பொழியும் அடைமழை, சுழல் காற்று, சூனிய வெளி, தளிர்விடும் தாவரம், அடர்ந்த காடுகள், பரந்த புல்வெளிகள், மண்ணை மனிதனாக உருவாக்கும் இயற்கையின் விந்தை—முதல் மனிதனின் தோற்றம், அவன் இவ்வுலகைக் காணும் பார்வையில் தோன்றும் வியப்பு, தன் உருவை நீரில் கண்டு களிகொள்ளும் போக்கு, மற்றொரு மனித உருவை—முதல் பெண்ணைக் கண்டதும் ஏற்படும் சிலிர்ப்பு. இப்படி விவிலிய வேதத்தின் விவரப்படி உலகின் தோற்றத்தை உயிர்ப்பித்துக் காட்டும் காட்சிகள் உள்ளத்தை விட்டகலாதவை! பிறந்த மேனியர்களாய் ஆதாமும் ஏவாளும் ஆண்டவன் ஆக்கித் தந்த தோட்டத்திலே உலவும் காட்சிகளை எத்தனை அழகாக, கௌரவமாக, பார்ப்பவர்களுக்கு எவ்வித விரச உணர்வும் ஏற்படாதவகையில் உருவாக்கியிருக்கிறார்கள்! விசேஷமான ஒளி அமைப்பு முறையில், பொன்னொளி பூந்துகிலால் போர்த்தப்பட்ட காட்சிகளாக—ஆனால் நம் நெஞ்சிலே பொதிந்து விடும் சித்திரங்களாகப் படமாக்கப்பட்டுள்ளன.

நோ ஆஃவின் படகு ஒரு பிரமிப்பூட்டும் படைப்பு. திரையில் நாற்பத்தைந்து நிமிஷங்களை ஆக்கிரமித்துக் கொண்டுள்ள இப்படகுக் காட்சிக்காக ஐந்து மிலியன் டாலர்கள் செலவிட்டிருக்கிறார்கள். அத்தனையும் தத்ரூபம். நாம் திரையில் காணும் ஒரு படகுக் காட்சியைப் பூரணமாக்க ஐந்து மாபெரும் படகுகள் உருவாக்கப்பட்டனவாம். படகுக்குள் ஜோடி ஜோடியாக இருநூறு வகை மிருகங்களையும் ஆயிரம் பறவை இனங்களையும் ‘நோ ஆஃ’ அழைத்துச் செல்லும் காட்சி! அற்புதம். புலியும், மானும் அருகருகே—பசுவும் சிங்கமும் பக்கத்தில் பக்கத்தில். பரவசமூட்டும் காட்சி! படத்தின் டைரக்டரான ஜான் ஹஸ்டனே ‘நோ ஆஃ’ ஆக நடித்திருக்கிறார்.

பேபல் கோபுரக் காட்சியின் கம்பீரமும் படகுக் காட்சிக்கு இணையாக அமைந்துள்ளது. ஆபிரஹாமின் வாழ்க்கை உள்ளத்தைத் தொடும் வண்ணம் உருவாக்கப்பட்டுள்ளது. காண முடியாத கடவுளைக் காணாமலேயே பக்தி செலுத்தத் தூண்டும் உத்தியைத் திறமையாகக் கையாண்டிருக்கிறார் டைரக்டர் ஹஸ்டன்.

பெரும்பான்மையான மக்களால் போற்றப்படும் ஒரு மகத்தான கதையைப் படமாக்கும் போது அதில் ஓர் ஈடுபாடு, பக்தி உணர்வு, நம்பிக்கை, அதைக் காணும் மக்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்கும் மனப்பான்மை இத்தனையும் தேவை. தான் மேற்கொள்ளும் கலைப்பணியில் கருத்தும் கவலையும் கொண்டு, பன்னெடும் காலமாக நிலவி வரும் சம்பிரதாயமான பழக்க வழக்கங்களுக்கும் மதிப்புக் கொடுத்து உருவாக்கப்படும் திரைப்படங்கள் ஒப்பற்ற படைப்புக்களாகத் தான் திகழும். தி பைபிள் இத்தகைய ஒரு படம்தான்; ஆயிரத்தில் ஒரு படம்.

உலகின் முதல் மனித இனத்தைப் பற்றிய—முதல் இன்பத்தைப் பற்றிய, முதல் பாபத்தைப் பற்றிய, முதல் கொலையைப் பற்றிய, முதல் அழிவைப் பற்றிய, முதல் பெரிய வெள்ளத்தைப் பற்றிய, முதல் பெரிய மரக்கலத்தைப் பற்றிய, முதல் வானைமுட்டும் மாளிகையைப் பற்றிய முதல்தரமான படம்—‘தி பைபிள்’. பக்திப் படங்களைக் கண்டு பல்லைக் கடிக்கும் பகுத்தறிவுவாதிகளையும் பரவசத்தில் ஆழ்த்தும் மகத்தான படைப்பு இது.



# பத்தாயிரம் ஆண்டுகள்!

"அப்போது, அதாவது 1944–48ல் டெல்லியில் நான் பிரெஞ்சு தகவல் துறையின் டைரக்டராக இருந்தேன். மௌலானா அபுல் கலாம் ஆஸாத் மந்திரி ஆன புதிதில் எனக்கு அறிமுகமானார். இந்தியாவைப் பற்றி நான் தெரிந்து கொண்டிருந்த விஷயங்களைக் கண்டு வியந்த ஆஸாத், 'இந்தியாவை நீங்கள் எவ்வளவு ஆண்டுகளாக அறிவீர்கள்?' என்று கேட்டார். நான் சிரித்தவாறு, 'பத்தாயிரம் ஆண்டுகளாக!' என்று பதிலிறுத்தேன். 'இருக்கும். அவ்வளவு தெரிந்து கொண்டிருக்கிறீர்கள்!' என்று அப்போது மகிழ்ச்சியுடன் கூறியவர் அதன் பின்னர் என்னை எங்கே சந்தித்தாலும் கையை ஆட்டி, 'பத்தாயிரம் ஆண்டுகள்!' என்று கூவி அழைப்பார். நானும் 'பத்தாயிரம் ஆண்டுகள்' என்று கூறியவண்ணம் அவரை அணுகுவேன். அருகிலுள்ள எங்கள் நண்பர்களெல்லாம், 'இதென்ன, உங்களுக்குள் விசித்திரமான சங்கேத மொழி?' என்று வியப்புடன் கேட்பார்கள்." இப்படிச் சொன்னவர் சிறிது காலத்துக்கு முன் பாரதத்துக்கு விஜயம் செய்த பிரெஞ்சு தாதுகோஷ்டியின் தலைவர் ஃபிரான்ஸிஸ் ப்ருனெல்.



டாக்டர்கள், சிற்பிகள், தொழில் துறையினர், பத்திரிகை

ள்ளி ஆசிரி
பல்வேறு
ஆசிரியர்கள், ப யாற்றும்
யைகள் ஆகிய ஈரர்கள்
துறைகளில் பணி லாசார
முப்பது பிரஞ்சுக்க சென்
அடங்கிய இக் க தனர்.
தாதுகோஷ்டியினர் நாட்
னைக்கு விஜயம் செய் ருந்து
பெரும்பாலும் நம்
டுக்குப்பிறநாடுகளிலி

வரும் கலாசாரக் குழுக்களும், உல்லாசப் பயணிகளும், இந்திய நகரங்களில் நடைபாதையில் படுத்திருக்கும் பிச்சைக்காரர்களையும் பாம்பாட்டிகளையும் கைரேகை சோதிடர்களையும் பார்த்துவிட்டு 'இதுதான் இந்தியா!' என்று எண்ணத்துடன் திரும்புவது வழக்கம். சென்னைக்கு விஜயம் செய்யும்போது, மௌண்ட் ரோடு, சைனா பஜார், மூர் மார்க்கெட், மெரினா, மியூசியம் இவைகளைப் பார்த்துத் திருப்தி (அல்லது அதிருப்தி)யுடன் திரும்புகிறார்கள் என்பது தெரிந்த விஷயம். ஆனால் இந்தக் குழு அதற்கு முற்றிலும் மாறானது என்ற உண்மையைக் குழுத் தலைவர் ப்ருனெல் அவர்களைப் பேட்டி கண்டபோது அறிந்து கொள்ள முடிந்தது.

இந்தியாவின் ஜீவன், இந்தியக் கலாசாரத்தின் உயிர்நாடி எங்கே இருக்கிறதுஎன்பதைநன்குஉணர்ந்திருப்பவர் ப்ருனெல். கீழ்த்திசை நாடுகளின் மொழிகளில் எம். ஏ. பட்டமும், டாக்டர் பட்டங்களும் பெற்றுள்ள ப்ருனெல் கவி ரவீந்திரநாத்தாகூருடன்நெருங்கிப் பழகியவர். ரவீந்திரரின் கவிதைகளில் மிக்க ஈடுபாடு உள்ளவர். இந்தியா பற்றி இவர் ஓர் அரிய நூல் (India and its Wonders) எழுதியுள்ளார். அதன் விலை ரூ. 180. (ஒரு பிரதி!) 1933ல்





இவர் முதன் முறையாகப் பாரதத்துக்கு விஜயம் செய்தார்.

''இந்தக் கலாசாரக்குழுவின் பாரத சுற்றுப் பயணம் பிரெஞ்சு அரசாங்கத்தின் ஆதரவில் ஏற்பாடு செய்யப்பட்டதா?'' என்ற ஐயத்தை வெளியிட்டேன்.

''இல்லை. 'பிளானெட்' (Planet) என்ற பிரெஞ்சுப் பத்திரிகையின் ஆதரவில் ஏற்பாடானது. ஒரு லட்சம் சந்தாதாரர்கள் உள்ள, செல்வாக்குள்ள பிரெஞ்சுப் பத்திரிகை இது. இத்தாலி, ஸ்பானிஷ், டச்சு மொழிகளிலும் இது பதிப்பிக்கப்படுகிறது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் தொடங்கப்பெற்ற 'பிளானெட்' விஞ்ஞானம், தத்துவம் முதலிய பல்வேறு துறைகளில் புதிய கண்ணோட்டத்தில் உருவாகும் அரிய கட்டுரைகளைப் பிரசுரிக்கிறது'' என்றார்.

''இதற்கு நீங்கள் விஷய தானம் செய்வதுண்டா?''

''இந்திய தத்துவம் பற்றிய கட்டுரைகள் அவ்வப்போது எழுதுவேன்.''

''உங்கள் தொழில்?''

''பிரபஞ்சம்முழுவதிலுமுள்ளஉயிரினங்கள் செடி, கொடி, நீர், ஆகாசம் அனைத்தையும் பற்றி அறிந்து, நேரில் கண்டு ஆனந்திப்பது. அனைத்துப் பொருள்களிடமும் அன்பு செலுத்துவது'' என்றார் அவர் சிரித்தவாறு.

''பரவலாக இருக்கிறதே? இன்னும் சற்றுக் குறிப்பாகக் கூற முடியுமா?''

''அறிவு பரவலாக இருப்பதையே நான் விரும்புகிறேன்'' என்று கூறிய ப்ருனெல் ஒரு சிற்பி, ஓவியர், எழுத்தாளர், ஆராய்ச்சியாளர். இவை தவிர அவர் திரைப்படங்களும் தயாரிக்கிறார்.

''பிரான்ஸ் எந்த வகையில் பாரதத்தின் முன்னேற்றத்துக்கு உதவ முடியும் என்று கருதுகிறீர்கள்?''

''இவ்விரு நாடுகளும் காந்தத்தின் இரு முனைகள் போன்றவை. காந்தத்தின் இரு முனைகளிலும் உள்ள கவர்ச்சியால் இரும்புத் தூள்கள் கொத்தாக ஒட்டிக் கொள்வதே போல், இவ்விரு நாடுகளும் உலகில் உள்ள நல்ல விஷயங்களை, குணநலன்களை, சிறப்புக் களையெல்லாம் கவர்ந்து இழுத்துப் பொலிவுடன் திகழ வேண்டும் என்பதே என் அவா. பிரெஞ்சு மக்கள் பாரதத்தைச் சரியான கண்ணோட்டத்தில் பார்த்துப் புரிந்துகொள்ள வேண்டும். இந்தியாவைப் பற்றி என் நாட்டு மக்களிடையே நல்ல முறையில் எடுத்துச் சொல்லிப் புரிய வைப்பதே என் வாழ்வின் குறிக்கோள். உலகம் முழுவதற்கும் வாரி வழங்க உங்களிடம் குறைவற்ற நிதியம் குவிந்து கிடக்கிறதே?'' என்றார் ப்ருனெல்.

''என்ன? ஏழை இந்தியாவிடமா?'' என்றேன் நான் வியப்புடன்.

''ஏழை இந்தியா என்று யார் சொன்னது? பொருளாதார அடிப்படையில் ஏன் கணக்குப் பார்க்கிறீர்கள்? ஆத்மீகத் துறை பற்றித்தான் நான் குறிப்பிடுகிறேன்.''

நேருஜி அணிவது போன்ற இறுக்கமான கால்சராயும், மேலே ஜிப்பாவும், அணிந்து கொண்டிருக்கும் இந்தப் பிரெஞ்சு அறிஞர் காப்பி, தேநீர், மது இவைகளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. வாழ்நாள் முழுவதும் சுத்த சைவம்!

அவர் தலைமையில் சென்னைக்கு விஜயம் செய்த குழுவின் உறுப்பினர்களை அறிமுகம் செய்வித்து விடையளித்தபோது, ''ஒன்று மறந்து விடாதீர்கள். பாரதக் கலாசாரத்துக்கும் தொன்மையான உங்கள் நாகரிகத்துக்கும் காரணமானது சம்ஸ்கிருத மொழி. சம்ஸ்கிருதத்தை மட்டும் உதாசீனம் செய்து விடாதீர்கள். இணையற்ற அந்த மொழி உங்கள் கலாசாரத்தின் ஜீவன்!'' என்று வலியுறுத்திக் கூறினார்.

ஃபிரான்ஸிஸ் ப்ருனெலுக்கு நான்கு குழந்தைகள் உள்ளனர். அவர்களுள் ஒரு குழந்தை ஹிமாசலத்தில் பிறந்ததாம்.

பேட்டி கண்டவர்: **'பாணன்'**

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## பாரிஸ் நகரில் ஒரு மாலை (ஹிந்தி)

ஆங்கிலத் தலைப்பு. ஹிந்திப் படம். அப்படி ஒரு மோகம் ஹிந்திப் படத் தயாரிப்பாளர்களுக்கு.

தீபா ஒரு பணக்காரப் பெண். சிறு பிராயம் முதற்கொண்டே காதலில் இறங்கி ஏமாந்து ஏமாந்து அலுத்துப் போய்ப் பாரிஸ் நகரைச் சரண் அடைகிறாள் — நம் நாட்டுச் சூழ்நிலை சலித்துப் போய்ப் பிற நாட்டை நாடும் தயாரிப்பாளர்கள் போல. காதற்களமான அங்கே காதல் புரியத் தொடங்குகிறாள்; சொல்லப் போனால் அப்பட்டமாகப் படம் பிடிக்கத் தயாரிப்பாளர்களுக்கு அரிய வாய்ப்பு அளிக்கிறாள். அவள் காதலைத் தொடர்ந்து பல நூதனமான போர்க்களங்கள் உருவாகின்றன. இது போன்ற போர்க்களங்களைப் பார்த்துப் பார்த்து 'போர்' ஆகும் ரசிகர்களைப் படத்தில் ஒரு புதுமை இருப்பதாக எண்ண வைத்து மயக்குவது இப்போர்கள் மேனாட்டுச் சூழலில் நடப்பதுதான்.

இந்திய மண்ணைத் தாண்டிச் சென்று வெளி மண்ணில் படம் பிடிப்பவர்கள் போட்ட முதலை வட்டியும் முதலுமாக எடுத்து விடலாம் என்று நம்புகிறார்களே, அவர்கள் நம்பிக்கைக்கு உரம் ஊட்டும் அளவுக்கு வெளி நாட்டுக் காட்சிகள் கண்ணைக் கவரும் வண்ணத்தில் உயர்வாக அமைந்திருக்கின்றன. ஆனால் கருத்தைக் கவரும் அளவுக்குக் கதையோ நடிப்போ அமையவில்லை. ஷம்மி கபூரின் கோனஷ்டை நடிப்பு கதாநாயகனின் கம்பீரத்துக்கு உகந்ததாயில்லை. ஷர்மிலா டாகூர் இரட்டைப்பாத்திரமேற்று நடித்தாலும் நடிப்பில் உயிர்ப்பைக் காட்டவில்லை. ஒருசில காட்சிகளில் வரும் கே. என். சிங்கின் நடிப்புத்தான் ரசிகர்களின் மனத்தில் நிற்பதாக அமைந்துள்ளது. பிரான், ராஜேந்திரநாத் ஆகியவர்களின் நடிப்பு கவடு மாறாத நடிப்பு. இசை ஒருசில இடங்களில் நன்கு பரிமளிக்கிறது. மற்ற இடங்களில் நயாகரா நீர்வீழ்ச்சியாக ஒலிக்கிறது! ஆயினும் புறக் காட்சிகள் பல எல்லாக் குறைகளையும் மறைத்துப் படம் பார்ப்பவர்களுக்கு மகிழ்வைத் தர முயலுகின்றன. இப்படத்தைப் பார்ப்பவர்களுக்கு ஆழ்கடலில் முத்துக் குளிக்கும் மனத் திண்மை வேண்டும்.



இதோ:
# மாஜிக்

அபரிமித வெண்மையாக்கும்

# கண்ணுக்கு வெண்மை
# கருத்துக்குப் புதுமை

ஆம், **மாஜிக்** என்றாலே அலாதி தான். அதன் அபரிமித வெண்மையாக்கும் ஆற்றல் வெள்ளைத் துணிகளைப் புதியன போல் வெளுக்கிறது. அதன் தூய்மை மணமோ துணிகளிலே நிலைக்கிறது. **மாஜிக்** நல்கும் நுரைவளம் இழைகளுக்கிடையில் உள்ள அழுக்குகளை வேரோடு களைகிறது. வீட்டுச் சலவையை சுலபமானதாகவும் சிக்கனம் உள்ளதாகவும் செய்கிறது. பருத்தியோ, பட்டோ, நைலானோ, டெரீனோ, என் கம்பளித் துணிகளையும் கூட **மாஜிக்** குடன் சலவை செய்யுங்கள். **மாஜிக்** ஒரு விந்தை மிக்க சலவைத் தூள்!




***மாஜிக் வெண்மை, மாஜிக் மெருகு, மாஜிக் புதுமை!***

டாடா
தயாரிப்பு

CMTM-10-123-TM

# மகாபாரதம்

ராஜாஜி

## 40. துரியோதனன் அவமானப்பட்டது!

பெரிய சேனையும் பரிவாரமும் கூட்டிக் கொண்டு கௌரவர்கள் துவைத வனம் சென்றார்கள். பாண்டவர்களுடைய கஷ்ட நிலைமையைக் கண்ணால் பார்த்து ஆனந்தம் அடைவோம் என்று துரியோதனனும் கர்ணனும் அடக்க முடியாத மகிழ்ச்சியுடன் போனார்கள். பாண்டவர்கள் இருந்த இடத்துக்கு நான்கு நாழிகை தூரத்தில் தங்களுடைய பரிவாரத்துக்கு இடம் பார்த்து விடுதிகளும் அமைத்துக் கொண்டார்கள்.

அங்கங்கே இருந்த மாட்டு மந்தைகளையெல்லாம் பார்த்து எண்ணி அடையாளமிட்டார்கள். பசுக்களையும் காளைகளையும் கணக்கெடுத்து முடிந்த பிறகு இடைச் சேரியில் ஆட்டமும் நர்த்தனமும் பார்த்து மகிழ்ந்தார்கள். அந்தக் காட்டிலுள்ள மிருகங்களை வளைத்து வேட்டையாடினார்கள்.

வேட்டையாடிக் கொண்டே சென்ற துரியோதனன், பாண்டவர்களுடைய ஆசிரமத்தண்டையிலிருந்த தடாகத்தை அடைந்தான். அங்கேயே சில நாட்கள் தங்கலாம் என்று தன் பரிவாரத்துக்கு உத்தரவிட்டான்.

துவைத வனத்துத் தடாகத்தண்டை கந்தர்வ ராஜன் சித்திரசேனனும் அவனுடைய பரிவாரமும் வந்து தங்கியிருந்தார்கள். துரியோதனனுடைய உத்தியோகஸ்தர்களை "இவ்விடம் நீங்கள் தங்கக் கூடாது; போங்கள்" என்று கந்தர்வர்கள் தடுத்து விட்டார்கள். அவர்கள் துரியோதனனிடம் சென்று வேறு யாரோ சிற்றரசன் தன் பரிவாரத்தோடு இருப்பதாகவும் தங்களைத் தடுத்ததாகவும் சொன்னார்கள்.

துரியோதனன் கோபம் கொண்டு, "என் உத்தரவைத் தடுக்கும்படியான அரசன் யார்? திரும்பிப் போய் அவர்களைத் துரத்திவிட்டு மறு காரியம் பாருங்கள்" என்றான்.

அவ்வாறே வேலைக்காரர்கள் தடாகத்தண்டை போய், விடுதிகள் கட்ட ஆரம்பித்தார்கள். கந்தர்வர்கள் அவர்களை அடித்து விரட்டி அப்புறப்படுத்தி விட்டார்கள்.

துரியோதனனுக்கு இந்தச் செய்தி எட்டியதும் மகா கோபம் கொண்டு பெருஞ் சேனையோடு தடாகத்தண்டை இருக்கும் குறும்புக்காரர்களை யெல்லாம் துவம்சம் செய்துவிடப் போனான்.

கந்தர்வர்களுக்கும் துரியோதனன் படைகளுக்கும் பெரும் போர் நடந்தது. முதலில் சாதாரண முறையில் யுத்தம் நடந்தது. அதில் கந்தர்வர்கள் தோல்வியடைந்தார்கள். இது தெரிந்ததும் கந்தர்வ ராஜனான சித்திரசேனன் கோபங் கொண்டு தன்னுடைய மாய அஸ்திரங்களைப் பிரயோகித்தான். கர்ணனுடைய மற்ற கௌரவ வீரர்கள் தேரும் ஆயுதங்களும் இழந்து புறங்காட்டி ஓடவேண்டியதாயிற்று. துரியோதனன் ஓடாமல் யுத்த களத்தில் நின்றான். சித்திரசேனன் அவனை உயிருடன் பிடித்துக் கயிற்றால் கட்டித் தன் ரதத்தில் தூக்கிப் போட்டுக் கொண்டு சங்கநாதம் செய்தான். கௌரவ வீரர்களில் முக்கியமானவர்கள் பலரைக் கந்தர்வர்கள் சிறைப்படுத்தினார்கள்.



கௌரவ சேனை! சிதறடிக்கப்பட்டுச் சிலர் பாண்டவர்களது ஆசிரமத்துக்கு ஓடிப் போய் முறையிட்டார்கள்.

பீமனுக்குச் சந்தோஷம் பொங்கிற்று. ''நாம் செய்ய வேண்டியதை இந்தக் கந்தர்வர்கள் செய்தார்கள். நம்மைப் பார்த்து ஏளனம் செய்ய வந்த இந்தத் துரியோதனனுக்குத் தகுந்த சிட்சை ஏற்பட்டது. நாம் செய்ய வேண்டிய பொறுப்பை இந்தக் கந்தர்வ நண்பன் ஏற்றுக் கொண்டான். அவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும்'' என்று பீமன் தன் மகிழ்ச்சியை யுதிஷ்டிரனிடம் தெரிவித்துக் கொண்டான்.

''அப்பனே! நீ மகிழ்வது சரியல்ல. நம்முடைய குலத்தவர்கள் சிறைப்பட்டிருப்பதை அறிந்து நாம் சும்மா இருக்கலாகாது. போய்த் துரியோதனனை விடுவிப்பாயாக!'' என்றான் தருமபுத்திரன்.

பீமனுக்கு யுதிஷ்டிரன் சொன்னது பிடிக்கவில்லை.

''நம்மை வஞ்சித்து அரக்கு மாளிகையில் எரித்துக் கொல்லப் பார்த்த இந்தப் பாதகனை நான் ஏன் போய் மீட்க வேண்டும்? என் உணவில் விஷம் கலந்து என்னைக் கட்டிப் போட்டுக் கங்கையில் மூழ்கடித்துச் சாகடிக்கப் பார்த்த இந்தத் துரியோதனன் மேல் ஏன் இரக்கம் கொள்கிறீர்? திரௌபதியைச் சபை முன் இழுத்து



அவமானம் செய்த அந்தக் கொடிய நீசர்களிடம் ஏன் சகோதரபாவம் வைக்கவேண்டும் என்கிறீர்'' என்றான்.

அந்தச் சமயத்தில் பிடிபட்ட துரியோதனனுடைய கூக்குரல் கேட்டது. தர்மபுத்திரன் பரபரப்புடன், ''பீமனுடைய ஆட்சேபணை தகாதது'' என்று சொல்லித் தம்பிகளை உடனே போய்க் கௌரவர்களை மீட்டுக் கொண்டு வர உத்தரவிட்டான்.

இதன் மேல் பீமனும் தனஞ்சயனும் தோல்வியடைந்த கௌரவர்களுடைய சேனையை மறுபடியும் திரட்டிக் கொண்டு போய்க் கந்தர்வர்களுடன் யுத்தம் துவக்கினார்கள்.

பாண்டவர்கள் வந்ததும் சித்திரசேனன் தன் கோபத்தை விட்டான். ''துராத்மாக்களான கௌரவர்களுக்குப் பாடம் கற்பிக்கத்தான் இவ்வாறு செய்தேன்'' என்று சொல்லி, கட்டுக்களை அவிழ்த்துவிட்டு, ''ஊருக்கு உடனே போங்கள்'' என்று துரியோதனாதியர்களை அனுப்பி விட்டான். அவமானப்பட்ட கௌரவர்களும் ஹஸ்தினாபுரத்துக்கு விரைவாகத் திரும்பினார்கள். புறங்காட்டி ஓடிய கர்ணன் துரியோதனனை வழியில் சந்தித்தான்.

''கர்ணனே! நான் அந்தச் சித்திரசேனனால் கொல்லப்பட்டு மாண்டு போயிருந்தால் நன்றாயிருந்திருக்கும்'' என்றான் துரியோதனன்.

கர்ணன் என்ன சமாதானம் சொல்லியும் துரியோதனன் கேட்கவில்லை. ''நான் இவ்விடமே உபவாசமிருந்து உயிர் நீப்பேன். துச்சாதனா! நீ பட்டம் பெற்றுக் கொண்டு ராஜ்யத்தை ஆள்வாய். பகைவர்கள் முன் பரிகசிக்கப்பட்டு இனி என்னால் உயிர் வைத்துக்கொண்டிருக்க முடியாது'' என்றான்.

துச்சாதனன் அண்ணன் காலைப் பிடித்துக் கொண்டு வேண்டாம் என்று அழுதான். இவ்வாறு சகோதரர்கள் புலம்பிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கர்ணனுக்குப் பொறுக்கவில்லை.

''குரு வம்சத்தவர்களே! இது உங்களுக்குத் தகாது. அற்பர்களைப் போல் ஏன் புலம்புகிறீர்கள்! சோகத்தில் என்ன நன்மையைக் காண்கிறீர்கள்? தைரியத்தை அடையுங்கள். நீங்கள் துயரப்பட்டால் உங்களுடைய பகைவர்களுக்கு அதில் மகிழ்ச்சி உண்டாகுமே யொழிய வேறு பயனில்லை. பாண்டவர்களைப் பாருங்கள்! அவர்களுக்கு நேர்ந்த அவமானங்களைக் கண்டு அவர்கள் பிராயோபவேசம் செய்யவில்லை!'' என்றான் கர்ணன்.

சகுனி பேச ஆரம்பித்தான்: ''கர்ணன் சொன்னதைக் கேள். பாண்டவர்களிடமிருந்து பறிக்கப்பட்ட ராஜ்யத்தை நீ அனுபவிக்கவேண்டியதாயிருக்க ஏன் உயிரைத் துறக்க வேண்டும் என்கிறாய்? உன்னுடைய யோசனை விபரீதமாக இருக்கிறது. எழுந்து வா! அல்லது இதுவரையில் செய்ததற்கு வருத்தப்படுவதாயிருந்தால் பாண்டவர்களோடு சிநேகம் செய்து கொண்டு அவர்களுக்கு ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டுச் சுகத்தை அடை!'' என்றான்.

இந்தப் பேச்சைக் கேட்டதும் மறுபடியும் துரியோதனனுக்குத் துர்ப்புத்தி மேலோங்கிற்று. அதுவரையில் தான் சொல்லி வந்தது ஏதோ சொப்பனம் போல் தோன்றிற்று. ''பாண்டவர்களை ஜெயிப்பேன்'' என்று கத்தினான்.

''பேஷ்!'' என்றான் கர்ணன்.

''மரணத்தில் என்ன நன்மை இருக்கிறது? உயிரோடு இருந்தாலல்லவா நன்மைகளை அடையலாம்?'' என்று சொல்லிக் கர்ணன் துரியோதனனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

எல்லோரும் ஊர் திரும்பினார்கள். போகும் போது கர்ணன், ''நான் உனக்குச் சபதம் செய்து வாக்குத் தருகிறேன். பதின்மூன்று வருஷங்கள் கழிந்ததும் நான் யுத்தத்தில் அர்ச்சுனனைக் கொல்லுவேன்'' என்று கத்தியைத் தொட்டுத் துரியோதனனுக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்தான்.

# 41. கண்ணன் பசி

**பா**ண்டவர்களின் வனவாச காலத்தில் துரியோதனன் ஒரு பெரிய யாகம் செய்து சிறப்பாக முடித்தான். முதலில் ராஜசூய யாகமே செய்யலாம் என்று ஆரம்பித்தான்! ஆனால் பிராமணர்கள் ''யுதிஷ்டிரனும் திருதராஷ்டிரனும், உயிருடன் இருக்கும் போது நீ ராஜசூயம் செய்ய இயலாது. வைஷ்ணவம் என்கிற சிறந்த யாகம் ஒன்று உண்டு. ராஜசூயத்துக்குப் பதிலாக அதைச் செய்யலாம்'' என்றார்கள்.

அவ்வாறே செய்தான். யாகம் முடிந்தபின் நகரத்தில் சிலர் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். ''இது என்ன யாகம்? யுதிஷ்டிரன் செய்வித்த ராஜசூயத்தின் பதினாறில் ஓர் அம்சத்துக்கு ஈடாகாது'' என்றார்கள். ஆனால் துரியோதனனுடைய நண்

பர்கள் அவனைப் புகழ்ந்து அவன் செய்த யாகத்தின் சிறப்பை எடுத்துப் பேசி அது யயாதி, மாந்தாதா, பரதன் முதலானோர் செய்த யாகத்துக்குச் சமானமாகும் என்றார்கள். துரியோதனன் இந்தப் புகழ்ச் சொற்களைக் கேட்டு சந்தோஷமடைந்தான்.

அரண்மனையை அண்டிப் பிழைத்த மற்ற ஸ்துதிக்காரர்களும் துரியோதனனை ஸ்தோத்திரம் செய்து அவன் மேல் நெல் பொரியும் சந்தனத் தூளும் வாரி இறைத்தார்கள். இந்தச் சமயத்தில் கர்ணன் எழுந்து துரியோதனனைப் பார்த்து, ''சீக்கிரம் யுத்தத்தில் பாண்டவர்கள் தோல்வியடைந்து கொல்லப்படுவார்கள். பிறகு நீ ராஜசூய யாகமும் செய்வாய். அருச்சுனனை நான் வதம் செய்வேன். அதுவரையில் நான் என் கால்களைத் தண்ணீர் விட்டு அலம்பமாட்டேன். எவன் என்ன யாசித்தாலும் இல்லை என்று சொல்லமாட்டேன்'' என்று சபையில் பிரதிக்ஞை செய்தான்.

இதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த திருதராஷ்டிர புத்திரர்கள் பேரார வாரம் செய்தார்கள். மகாரதனான கர்ணனுடைய சபதத்தைக் கேட்டதும் பாண்டவர்களுடைய கதி முடிந்தது என்றே அவர்கள் நிச்சயம் செய்து கொண்டார்கள்.

கர்ணன் அருச்சுனனைக் கொல்வேன் என்று யாகசாலையில் பிரதிக்ஞை செய்ததைப் பற்றி வனத்திலிருந்த பாண்டவர்களிடம் சாரணர்கள் போய்ச் சொன்னார்கள். இந்தப் பேச்சைக் கேட்ட தருமபுத்திரன் துயரத்தில் ஆழ்ந்தான். நெடுநேரம் தரையைப் பார்த்தவண்ணமிருந்தான். ''கர்ணன் தெய்வீகக் கவசம் படைத்தவன். அற்புதமான பராக்கிரமசாலி. காலமும் நமக்கு விரோதமாக இருக்கிறது'' என்று எண்ணிக் கவலைப்பட்டான்.

ஒரு நாள் காலையில் யுதிஷ்டிரன் தூக்கத்தின் முடிவில் ஒரு கனவு கண்டான். அநேகமாகக் கனவுகள் தூக்கத்தின் முதலிலும் முடிவிலுமே வரும். துவைத வனத்திலிருந்த துஷ்ட மிருகங்கள் வந்து தன்னிடம் முறையிட்டதாகக் கனவு கண்டான். ''எங்களை வேட்டையாடிப் பெரும்பாலும் கொன்று தீர்த்து விட்டீர்கள். நாங்கள் அடியோடு நாசமாகாமலிருக்க வேண்டும். தயவுசெய்து நீங்கள் வேறு இடம் சென்று வனவாசம் செய்யுங்கள். நாங்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்து விட்டோம். மிச்சமிருக்கிற நாங்கள் சிலரே எங்கள் குலத்துக்கு வித்தாக இருக்கிறோம். உம்முடைய அருளால் நாம் விருத்தி அடையக் கடவோம். உமக்கு மங்களம். எங்கள் மீது தயை செய்யக் கடவீர்'' என்று கண்ணீரும் கம்பலையுமாக மிருகங்கள் கனவில் சொல்லின. இந்தக் கனவு யுதிஷ்டிரனை மிகவும் வாட்டிற்று. சகோதரர்களுக்கு விஷயத்தைச் சொல்லி அவர்களும் உடன்பட, எல்லோரும் வேறு வனம் சென்றார்கள்.

காட்டையும் காட்டு மிருகங்களையும் அழித்துவிடலாகாது என்பது நம்முடைய முன்னோருக்கு நன்றாகத் தெரிந்திருந்தது.

ஃ ஃ ஃ

ஒரு நாள் துருவாச ரிஷி பதினாயிரம் சிஷ்யர்களுடன் துரியோதனனிடம் வந்தார். ரிஷியின் சாபத்துக்குப் பயந்து மிகவும் கவனமாக நேரில் தானே எல்லாக் காரியங்களையும் துரியோதனன் வகித்து அதிதி பூஜையை வெற்றிகரமாகவே முடித்தான். ரிஷி திருப்தி அடைந்து, ''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார்.

அதிக கோப சுபாவமுள்ள அந்த முனிவரைத் திருப்தி செய்தது, தான் மறுபடியும் பிறந்த மாதிரி என்று துரியோதனன் மகிழ்ந்தான். என்ன வரம் கேட்கலாம் என்று ஆலோசித்தான். பாவ சுபாவம் படைத்த அந்த ராஜகுமாரன் கேட்ட வரமாவது:

''சுவாமி! சிஷ்யர்களோடு எனக்கு அதிதியாக வந்ததைப் போலவே வனத்தில் இருக்கிற எங்கள் சகோதரர்களான பாண்டவர்களிடமும் போய் அதிதியாக இருக்க வேண்டும். மகாராஜனும் எங்கள் குலத்தில் மிக்கச் சிறப்புப் படைத்தவருமான யுதிஷ்டிரனிடம் தாங்கள் செல்ல வேண்டும். என்னிடத்தில் அனுக்கிரகம் வைத்து அவருக்கு அதிதியாகக் கடவீர். ராஜபுத்திர பாஞ்சாலியானவள் பாண்டவர்களுக்கும் அவர்களுடைய பரிவாரத்திலுள்ள எல்லோருக்கும் போஜனம் செய்வித்துக் களைப்பாற்றிக் கொண்டு சுகமாக உட்கார்ந்திருக்கும்போது தேவரீர் அவர்களிடம் செல்ல வேண்டும் என்பது என் வேண்டுகோள்.''

இவ்வாறு துரியோதனன் சொன்னதும் ஜனங்களைப் பரீட்சை செய்வதில் எப்போதும் பிரியம் கொண்ட துருவாசரும், ''அப்படியே செய்கிறேன்'' என்றார்.

**(தொடரும்)**



# துருவங்கள் சேர்ந்தால்

பல படங்களில் துப்பறிபவராக நடித்திருக்கும் எம். ஜி. ஆர். நிஜ வாழ்க்கையில் துப்பறிபவராக மாறினால்.....?

## காட்சி 1

[எம். ஜி. ஆர். வீட்டில் அவருடைய காரியாலய அறை. துப்பறியும் நாவல் ஒன்றில் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்த எம். ஜி. ஆர். திடீரென்று எழுந்து அறையின் குறுக்கும் நெடுக்குமாக நான்கைந்து தடவைகள் நடக்கிறார்.] பிறகு டெலிபோனில் ஒரு நண்பரைச் சுற்றுகிறார்.]

எம். ஜி. ஆர். (டெலிபோனில்): அண்ணே! ஒரு அர்ஜெண்ட் விஷயம்! மேக் அப் பெட்டியோட உடனே வர்றீங்களா?

டெலிபோன் குரல்: அடேடே! நம்ம வாத்தியாரு! வணக்கம் அண்ணே! என்ன செய்யணும் சொல்லுங்க!

எம். ஜி. ஆர்.: நான் கொஞ்ச காலத்துக்குத் துப்பறிகிற துறையிலே இறங்கியிருக்கேன்.... அது சம்பந்தமா... இன்னும் அரை மணியிலே இங்கே மேக்அப் சாதனங்களுடன் வந்துவிடு.

டெலிபோன் குரல்: சினிமாவுக்காக இல்லையா? அண்ணே, செட்டிலே நான் இப்போ கொஞ்சம் பிஸியாயிருக்கேன். நம்ம சிஷ்யனை அனுப்பி வைக்கிறேனே...

எம். ஜி. ஆர்.: உன் குருநாதன் வர வேண்டிய அளவுக்கு முக்கியமான விஷயம். அவரு காலமாயிட்டதாலே உன்னைக் கூப்பிடறேன்.!... இப்போ வரலேன்னு.. அப்புறம் எந்த ஸ்டுடியோவுக்கும் நீ வர வேண்டியதில்லை!

டெலிபோன் குரல்: அண்ணே! அண்ணே! கிளம்பிக்கிட்டே இருக்கேன்... என்ன மேக் அப்னு ஒரு ஐடியா கொடுங்களேன்...

எம். ஜி. ஆர்.: ஒரு காலேஜ் ஸ்டுடெண்ட்! தன் தாத்தாவோடே கிராமத்துக்குக் கிளம்பறப்பலே...

டெலிபோன் குரல்: உங்களுக்குப் பழகிப் போன மேக் அப்தான் அண்ணே! பிரமாதமா இருக்கும்!

எம்.ஜி.ஆர்.: எனக்குத் தாத்தா வேஷம் பிரதர்!... நம்ப ஜெயலலிதாதான் காலேஜ் ஸ்டுடண்டு...ஆனால் கர்நாடகபாணியில்! அதற்கும் காரணம் உண்டு.

டெலிபோன் குரல்: என்ன அண்ணே!..• பாவம்! அந்தப் பொண்ணையும் சினிமாத் துறையை விட்டு விலகச் சொல்லிட்டீங்களா! அது என்னவெல்லாமோ கனவு கண்டுக்கிட்டு இருக்கு...

எம்.ஜி.ஆர்.: கொஞ்ச நாளைக்கு நம்ப துப்பறியற துறைக்கு கெஸ்ட் ஆர்ட்டிஸ்டாக வருது அவ்வளவுதான்!.... சீக்கிரம் கிளம்பு.

[டெலிபோனை வைத்துவிட்டு மீண்டும் சுழல் நாற்காலியில் வந்து அமருகிறார்]

## காட்சி 2

[அன்று மாலை. சென்னைக்குச் சில மைல்களுக்கு அப்பால் உள்ள ஒரு கிராமத்தில் சத்திரம் போல் காட்சி யளிக்கும் ஒரு பழங்கால வீடு. திண்ணையில் சத்திர மேற்பார்வையாளர் உட்கார்ந்திருக்கிறார். கையில் சாக்குப் பையுடன் ஒரு கிழவனும், கர்நாடக பாணியில், மாட்டில், பில்லாக்கு, ராக்கடி, அட்டிகை முதலியன அணிந்த ஒரு யுவதியும் வருகிறார்கள்.]

கிழவனார் (சத்திரத்து மேற்பார்வையாளரிடம்): ஐயா! ஊருக்குப் போகும் வண்டியை தவறவிட்டுவிட்டோமுங்க! நாளைக் காலைவரை தங்கியிருக்க இங்கே இடம்..!...? இது என் பேத்திங்க...கலியாண விஷயமா...

மேற்பார்வையாளர்: சரிதானய்யா! என்னவோ வசனமும் காலையும் ஆட்டிப் பேசிய எம். ஜி. ஆர். மாதிரி பேசறியே...! இங்கே இடம் ஒண்ணும் காலியில்லை. ஏற்கனவே பல பிரயாணிகள் வந்து உட்கார்ந்திருக்காங்க.

கிழவனார்: ஓ!... நீங்க அந்த சினிமா நட்சத்திர எம். ஜி. ஆரைச் சொல்றீங்களா!... அவர் எங்கே நான் எங்கே... நீங்க பெரிய மனசு பண்ணித் தங்கறதுக்கு...

மேற்பார்வையாளர்: பணம் வச்சிருக்கியா?

கிழவனார்: நிறைய இருக்கே! அதனாலே தான் கவலையாக இருக்குது... போதாக்

குறைக்கு என் பேத்தி நகை நட்டோட வேறே இருக்கா...

மேற்பார்வையாளர் (தணிந்த குரலில்): பத்து ரூபாயை இப்படி நகட்டு! நான் தங்கி இருக்கிற அறையிலே தங்கிக்கிடலாம்...

கிழவனார் (படபடப்புடன்): இது தர்ம சத்திரம்னுதானே சொன்னுங்க... நீங்க இப்படி அநியாயமாய்...

மேற்பார்வையாளர்: போய்யா! பொல்லா நியாயத்தைக் கண்டுட்டே... நியாயம் எங்கே இருக்குன்னு கண்டுபிடிச்சுட்டு வந்து சொல்லு! அப்புறம் தர்மத்துக்கு இடம் தருகிறேன்.

கிழவனார் (தன்னை மறந்து): நியாயம் எங்கே இருக்குன்னு கேக்கறே? ... நியாயம் அறிஞர் சிந்தனையிலே இருக்கு! அவரின் அரசாட்சியிலே இருக்கு! கண்ணியம், கடமை, கட்டுப்பாடு மூன்றுக்கும் கட்டுப்பட்ட தோழர்கள் உள்ளங்களிலே இருக்கு...

[மேற்பார்வையாளர் மேல் பாய்ந்து 'கும்கும்' என்று குத்துகிறார். சற்றுத் தள்ளி மரத்தடியிலிருந்த இரண்டு மூன்று வாலிபர்கள்ஓடி வருகிறார்கள்.]

முதல் வாலிபன் (கிழவனார் கையைப் பிடித்து): வணக்கம்! வணக்கம்! மக்கள் திலகமே! உங்கள் டயலாக்கைக் கேட்டவுடன் நான் தீர்மானித்து விட்டேன்.

இரண்டாம் வாலிபன்: நீங்க என்னதான் மேக் அப் போட்டுக்கிட்டு வந்தாலும் எங்களை ஏமாற்ற முடியுமா? எங்க எம். ஜி. ஆரைக் கண்டுக்கிடாமல் இருப்போமா?

முதல் வாலிபன்: சத்திரத்து மணியக்காரர் அசப்பிலே நம்பியார் மாதிரி இருக்காருல்ல! நம்ப வாத்தியாருக்குப் பழைய சினிமா ஞாபகம் வந்திடுச்சு!... குத்து விட்டுட்டாரு...

கிழவனார்: நீங்க என்ன சொல்றீங்க? எனக்கு ஒண்ணும் புரியலியே...

இரண்டாவது வாலிபன்: உங்க படம் எத்தனை பார்த்திருக்கிறோம். எங்ககிட்டேயே நடிச்சுக் காட்டிறீங்களா? நீங்க என்ன வேஷம் போட்டுக்கிட்டு வந்தாலும் எங்களை ஏமாத்த முடியுமா? சிக் உடை அணியாவிட்டாலும் ஜெயலலிதாவை நாங்க உடனே கண்டு பிடிச்சுடுவோம்!

[பல நபர்கள் கைகளில் பல பொருள்களுடன் ஓடி வருகிறார்கள். எம். ஜி. ஆர். ரசிகர் மன்றம் என்ற துணிப் படுதாவை ஒருவன் சத்திரத்து வாசலில் மாட்டுகிறான். பக்கத்திலேயே ஜெயலலிதா மன்றம் என்ற 'பானரு'ம் தொங்க விடப்படுகிறது. இரண்டுபேர் உள்ளிருந்து ஒரு பெஞ்சியைக் கொண்டு வந்து போடுகிறார்கள். இரண்டு நாற்காலிகளும் வருகின்றன.]

முதல் வாலிபன்: இந்த ஊர் எம். ஜி.ஆர். ரசிகர் மன்றத்தின் ஆண்டு விழாவை இப்போதே வைத்துக் கொள்வதாகத் தீர்மானித்து விட்டோம்.

சத்திர மேற்பார்வையாளர்: என்னை மன்னிக்கணும். நான்தான் உங்களை முதலில் அடையாளம் கண்டுபிடிச்சேன். இந்தச் சத்திரத்தைப் புதுப்பிக்க நீங்கதான் பத்தாயிரம் ரூபாயாவது நன்கொடை கொடுத்து உதவணும்...

கிழவனார் (சிரித்தபடியே): உமக்குப் பத்தாயிரம் சவுக்கடி கொடுத்தால் கூடப் போதாது. என் திட்டத்தை யெல்லாம் குட்டிச்சுவராக்கிட்டியே...

[உள்ளூர் கோவில் மேளக்காரர் திடீரென்று வாத்தியத்துடன் தோன்றிக் கொஞ்சம் கூடச் சுருதி இல்லாமல் 'காது கொடுத்துக் கேட்டேன். ஆகா! குவா குவா சத்தம்' என்ற பாட்டை வாசிக்க ஆரம்பிக்கிறார். விழாக்கோலம் களை கட்டுகிறது.]

## காட்சி 3

[கப்பல் போன்ற காரின் பின் பகுதி. எம். ஜி. ஆரும், ஜயலலிதாவும் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள்]

எம். ஜி. ஆர்.: எல்லாம் குட்டிச்சுவராகப் போச்சு! எப்படியோ என்னை அடையாளம் கண்டுபிடிச்சு என் திட்டத்தை யெல்லாம் தகர்த்து விட்டாங்க! இல்லாதபோனு..

ஜெயலலிதா: இல்லாதபோனு என்ன செஞ்சிருப்பீங்க? இந்த ஊருக்குப் புறப்பட்டு வந்த காரணத்தையே நீங்க இன்னும் சொல்லல்லே... இங்கே வந்ததிலே இரண்டு கால்ஷீட் போச்சு...

எம். ஜி. ஆர்.: எதுக்கு வந்தோமோ? இப்போ சிட்டியிலே நடமாடற முகமூடிக் கொள்ளைக் கூட்டத் தலைவன் இந்தக் கிராமத்திலே மாறுவேடத்தில் தங்கியிருக்கான்னு தகவல் கிடைச்சுது...அவனை எப்படியாவது கவர் பண்ணி...

ஜெயலலிதா: கடைசியிலே உங்களைத்தான் இந்தக் கிராமத்துக்காரங்க கவர் பண்ணி நன்கொடை வாக்குறுதி வாங்கிறுங்க! உங்களுக்கு எதுக்குங்க இந்தத் துப்பறியற ஆசையெல்லாம்!... பேசாமே மறுபடியும் நடிக்க வந்துடுங்க. அந்தக் கொள்ளைக்காரங்க எல்லாம் பொல்லாதவங்க. கொலைகாரங்க.

எம். ஜி. ஆர்.: எதிரிகளுக்குப் பயந்தால் நாம் எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. நெருப்புக்குப் பயந்து கடலை வறுப்பதா போன்னு சொல்லலாமா? இருட்டையே நம்பி சூரியனை உதிக்க வேண்டாமென்று சொல்லலாமா? சமூகத்துக்குச் சேவை பண்ணணும்னு அந்த முகமூடித் திருடர்களைப் பிடித்துத்தான் ஆக வேண்டும். அதை நான் செய்தே முடிப்பேன்.

ஜெயலலிதா: உங்களுக்கு இன்னும் பழைய பட டயலாக்கெல்லாம் மறக்கல்லே போலிருக்கே!

எம். ஜி. ஆர்.: நான் நாடக மேடையிலிருந்து திரைப்பட உலகுக்கு வந்தவன்னு தெரியுமில்ல...

ஜெயலலிதா: அதுதான் இப்போ துப்பறியும் நாடகத்திலே நடிக்கிறீங்க...

[கார் நகரத்தின் எல்லைக்குள் வரவே பேச்சு நிற்கிறது.]

## காட்சி 4

[ஒரு கல்யாண வீட்டில் வரவேற்பு மண்டபம். எம். ஜி. ஆர். நண்பர்கள்

புடைசூழ உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிறார். சற்றுத்தூரத்தில் தூணுக்கு மறைவில் நிற்கும் நபரைக் கவனிக்கிறார்.]

எம். ஜி. ஆர்.: அடேடே! நம்ப அசோகன் பிரதர் மாதிரியல்ல இருக்கு! பார்த்து நாளாச்சு. என்னத்துக்கு அவரு தாடி வளர்க்கிறாரு?... கிங்காங் தாடிக்கும் கண்வ மகரிஷி தாடிக்கும் இடையே உள்ள ரகமாக இருக்கே...? மனுஷன் என்ன உள்ளே வராமலேயே நழுவப் பாக்கறாரு... கூப்பிடய்யா அவரை... வேண்டாம்! நானே போயி இழுத்துக்கிட்டு வர்றேன்...

[எழுந்திருந்து தாடிக்காரரைப் பார்க்க நடக்கிறார். இரண்டு மூன்று புகைப்படக் காரர்களும் அவர் பின்னால் ஓடுகிறார்கள். எம். ஜி. ஆர். தாடிக்காரரின் கையைப் பிடித்துக் கொள்கிறார்.]

எம். ஜி. ஆர்.: என்ன பிரதர் அசோகன்! நான் என்றைக்குமே யாருக்குமே விரோதி இல்லையே! எதுக்காக இப்படி ஒதுங்கறீங்க?

தாடிக்காரர்: அதெல்லாம் ஒண்ணும் இல்லீங்க...

எம். ஜி. ஆர்.: குணம்தான் மாறிப் போச்சோன்னு நினைச்சேன்! குரல்கூட மாறிப் போயிருக்கே... எதுக்கு பிரதர் தாடி வளர்க்கறே?... ரொம்ப அருமையான சில்க் தாடி.. நான் எத்தனையோ மேக் அப் போட்டு நடிச்சிருக்கேன். ஒரு தடவையாவது இப்படி அருமையான தாடி நான் ஒட்ட வச்சுக்கலே...

[கனிவோடு தாடியைத் தடவுகிறார். ஒரு புகைப்படக்காரர் பிளாஷ் போட்டோ எடுக்கிறார். கோபமடைந்த எம். ஜி. ஆர். அவசரமாகக் கையை எடுக்கும் போது அவர் மோதிரம் தாடியில் மாட்டிக் கொள்ளவே மோதிரத்துடன் தாடி தனியாக வந்து விடுகிறது. மற்றப் புகைப்படக்காரர்கள் பளிச்சென்று இந்தத் தாடி இடம் பெயரும் காட்சியைப் படம் பிடிக்கிறார்கள். மாஜி தாடி ஆசாமி அப்படியே குனிந்து நழுவப் பார்க்கிறார்.]

எம். ஜி. ஆர். அடேடே!...இது அசோகன் இல்லே... நாகரிகப் பண்டாரமா?

[ஒரு போலீஸ் அதிகாரி வேகமாக ஓடி வந்து நழுவ முயலும் மாஜி தாடியைப் பிடித்துக் கொள்கிறார்.]

போலீஸ் அதிகாரி (எம். ஜி. ஆரைப் பார்த்து): உங்களுக்கு எப்படி நன்றி தெரிவிக்கிறது என்று தெரியல்லே. நாங்க பல நாட்களாகத் தேடிக்கிட்டு இருக்கும் முகமூடிக் கொள்ளைக் கூட்டத் தலைவன் குல்மால் சிங் இவன்தான். நீங்க எப்படி இவ்வளவு கரெக்டா ஆசாமியை மடக்கினீங்க?

எம். ஜி. ஆர். (சமாளித்துக் கொண்டு): அதெல்லாம் தொழில் ரகசியம். இவனைப் பத்திரமாப் பிடிச்சுக்கிட்டுப்போங்க. (தணிந்த குரலில் தமக்குள்)... இனிமே தாடி வச்சிருக்கிறவங்க கிட்டே பேசறபோது கொஞ்சம் தள்ளி நின்றேதான் பேச வேண்டும்! இல்லே வம்பு!... என்னவோ இந்தக் கேஸிலே அதிருஷ்ட வசமாய்ப் போச்சு!...

[பத்திரிகை நிருபர்கள் எம். ஜி. ஆரைச் சூழ்ந்து கொள்ளுகிறார்கள். மீண்டும் காமிராக்கள் பளிச்சிடுகின்றன.]

— கோமதி சுவாமிநாதன்

## ஓர் அன்பளிப்பு

**இந்தப் புத்தகத்தை நீங்கள்**



**இலவசமாகப் பெற வேண்டுமா?**

அழகான முறையில் பல சித்திரங்களுடனும் மூவர்ண மேலட்டையுடனும் தயாராகியுள்ள இந்தச் சிறுகதைத் தொகுப்பில் **ராஜாஜி, அமரர் கல்கி, அகிலன், கு. அழகிரிசாமி, கி. ராஜேந்திரன்** ஆகியோர் எழுதிய ஏழு அருமையான சிறுகதைகள் அடங்கியுள்ளன.

**'பொன்னியின் செல்வன்'** மீண்டும் தொடர்ந்து கல்கியில் பிரசுரமாகவிருக்கும் குதூகல நிகழ்ச்சியையொட்டி கல்கி நேயர்களுக்கு இந்தப் புத்தகத்தை அன்பளிப்பாகத் தர முடிவு செய்துள்ளோம்.

ஒரு நிபந்தனை. ஜூலை 15ந் தேதி முதல் ஆகஸ்டு 15ந் தேதி வரை உள்ள ஒரு மாத இடைக்காலத்துக்குள் நமது காரியாலயத்துக்கு கல்கிக்கு ஓராண்டுச் சந்தாத் தொகை அனுப்பி வைப்பவர்களுக்கு மட்டுமே இந்தப் புத்தகம் இலவசமாக வழங்கப்படும்.

ஏற்கனவே நமது காரியாலயத்தில் கல்கிக்குச் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொண்டிருப்பவர்களும் இந்தப் புத்தகத்தை இலவசமாகப் பெற முடியும். அதற்கு அவர்கள் மேலே குறிப்பிட்டுள்ள காலத்துக்குள் (15–7–68 முதல் 15–8–68க்குள்) தங்கள் சந்தாவை ஒரு வருடத்துக்குப் புதுப்பித்துக் கொண்டால் போதும். அவர்களுடைய தற்போதைய சந்தா எந்தத் தேதியில் முடிகிறதோ, அதற்கு அடுத்த இதழிலிருந்து தொடங்கி மேலும் ஓராண்டுக்குப் புதுப்பிக்கப்படுவதுடன் 'பிரபல நட்சத்திரம்' சிறுகதைத் தொகுப்பும் இலவசமாக அனுப்பப்படும்.

ஓர் ஆண்டுச் சந்தாவை மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு நேரடியாக மேற்படி தேதிக்குள் அனுப்ப வேண்டுகிறோம். சந்தாத் தொகை அனுப்பும்போது "கல்கி சந்தா—புத்தக அன்பளிப்புத் திட்டம்" எனத் தவறாது குறிப்பிடவும்.

**ஆண்டுச் சந்தா: இந்தியா ரூ. 20. வெளிநாடு ரூ. 40. இலங்கை ரூ. 21**

(இலங்கை நாணயம்)



ஸ்டேட் பாங்க் ஆப் மைசூர் பெங்களூர் காரியாலயத்தின் ஜெனரல் மானேஜர் திரு எஸ். பாலகிருஷ்ணன் அவர்கள் குமாரத்தி சௌ. **சம்பகத்துக்கும்,** தஞ்சை அட்வகேட் திரு வி. வைத்யநாத அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி வி. **சிவகுமாரனுக்கும்** பெங்களூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்



நாமக்கல் கவிஞர் திரு வெ. ராமலிங்கம் பிள்ளை அவர்களின் பேத்தி சௌ. **விஜயலக்ஷ்மிக்கும்** சிரஞ்சீவி **வி. எல். பார்த்தசாரதிக்கும்** பாலக்காடு நூரணி சாரதா சங்கர மடத்தில் சமீபத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

மணமகன் கோயமுத்தூர் திரு லக்ஷ்மண கவுண்டரின் புதல்வர். புதுமணத் தம்பதிகளுக்கு ராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர் ஹுசைன், ராஜாஜி, உதவி ராஷ்டிரபதி திரு கிரி, பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி, முதன் மந்திரி திரு அண்ணாதுரை முதலியவர்களிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன. வாழ்க, மணமக்கள்!





# ஈரத் தண்ணீரும் உலர்ந்த தண்ணீரும்

> **சமீபத்தில் சென்னை நகரில் ஏற்பட்ட பெருந் தீ விபத்துக்களில் ஆயிரக் கணக்கான குடிசைகள் எரிந்து சாம்பலாயின. இச் சம்பவங்கள் 'தீயை அணைப்பதற்கு விஞ்ஞான ரீதியில் புதுமைகள் எதுவும் கண்டு பிடிக்கப்பட வில்லையா ?' என்ற கேள்வியைத் தோற்றுவிக்கின்றன.**

தொழிற்சாலைகளில் கோபுர வடிவத்தில் நெருப்பணைக்கும் கும்பங்களைச் சுவரில் மாட்டி வைத்திருப்பதைப் பார்க்கலாம். 'ஃபயர் எக்ஸ்டிங்விஷர்' என்ற இந்தக் கருவியில் கரியமில வாயு அடைத்து வைக்கப் பட்டிருக்கிறது. இவ்வாறே வேறு சில ரசாயன ஆவிகளைக் கொண்டும், தீயணைக்கும் சாதனங்களைச் செய்து கொள்ளலாம் என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ஆனால் இவை யாவும் பெரிய அளவில் தீயை அணைப்பதற்குப் பயன்படா.

பெரிய தீயை அணைப்பதற்குத் தீங்கு இல்லாததும் எங்கும் கிடைக்கக் கூடியதுமான தண்ணீரிலேயே விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள் தங்கள் கவனத்தைத் திருப்பி விட்டனர்.

அதன் விளைவாக ''ஃபாக் (Fog) தீயணைப்பு'' என்ற ஒரு புதுமையைக் கண்டு பிடித்தனர். இதன்படி தீயின்மீது தண்ணீரைப் பீறிட்டு அடிப்பதற்குப் பதில் அதை மூடு பனியாக மாற்றி, தீப்பிடித்த இடம் முழுமையும் உள்ளும் புறமும் சூழ்ந்து கொள்ளச் செய்தார்கள். பனிப் படலம், எரியும் பொருளின் இண்டு இடுக்குகளில்கூட, ஊடுருவிச் சென்று அதை நனைத்துவிடவே தீயை அணைப்பது முன்னைவிட இப்போது சுலபமாக இருந்தது. தீயை அணைக்கும் வண்டியில் இதற்காகப் பெரிய மாறுதலைச் செய்ய வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை. வண்டியில் உள்ள தண்ணீரைப் பனித் திவலைகளாக மாற்றி வெளியே வீசுவதற்கு மிகை காற்றழுத்தக் கருவி ஒன்றை மட்டும் இணைத்துக் கொண்டு விடலாம்.

இந்தப் பனிப்படலத் தீயணைப்பு முறை எங்கும் உபயோகத்துக்கு வந்து பாராட்டப் பட்டது. ஓரிடத்தில் தீ மூளும்போது அதை அணைத்தால் மட்டும் அபாயம் நீங்கிவிடுவதில்லை. சில சமயங்களில் எரிந்த பொருளின் அடியில் கதகதவென்று தணல் ஒளிந்துகொண்டிருப்பதும் உண்டு. தீயை அணைக்க வந்தவர்கள் எல்லோரும் சென்ற பிறகு அந்தக் கரிச் சாம்பலின் அடியிலிருந்து மெள்ள மெள்ளப் புகை வெளிப்படத் தொடங்கும். ஈரம் உலர்ந்ததும் மறுபடியும் அங்கே சிதறிக் கிடக்கும் பொருள்களில் தீப்பிடித்துக் கொண்டு அமர்க்களம் செய்து விடும்.

ஆகவே, நெருப்பை அணைத்த பிறகும் பல மணி நேரம் வரை அங்கு காவல் போட வேண்டியிருந்தது. பனிப் படலத் தீயணைப்பு முறைக்குக் கூட டிமிக்கி கொடுத்து விட்டு, எரிந்து அணைந்துபோன கரிச் சாம்பல் குவியல்களில் தீப்பற்றிக் கொள்வதைக் கண்டார்கள். வேறு வழிகளைப்பற்றி யோசித்தார்கள்.




தீயை அணைப்பதற்கு ஒரு சிறந்த முறை நெசவுத் தொழிலில் அகஸ்மாத்தாகக் கண்டுபிடிக்கப்பட்டது. இதற்கு (Wet Water) ''ஈரத் தண்ணீர் தீயணைப்பு முறை'' என்று பெயர்.

தண்ணீரில் உலர்ந்த தண்ணீர் என்றும் ஈரத் தண்ணீர் என்றும் உண்டா?

'' உண்டு '' என்கிறார்கள் தீயணைப்பு நிபுணர்கள்.




சினிமாக் கொட்டகைகளில் ஆண்கள் கியூ நீளமாக இருக்கும்போது, வரிசையில் கலந்து கொள்ளாமல் டிக்கட் கொடுக்குமிடத்துக்கு ஒன்று இரண்டு பெண்மணிகள் போய் டிக்கட் கேட்டவுடன் அவர்களுக்கு உடனே டிக்கட்டுகள் கொடுக்கப்படுவதைப் பார்த்திருக்கிறோம்; ஆத்திரமும் பட்டிருக்கிறோம். ஆனால் இதற்கு நேர்மாறான ஒரு சம்பவமும் நிகழ்ந்திருக்கிறது!

இடம்: ஸ்டெல்லா மாரிஸ் கல்லூரி. விண்ணப்பம் போடுவதற்கு நீண்ட பெண்கள் கியூ. இரண்டு ஆண்கள் கியூவில் நிற்காமல் நேரே போய் கவுண்டரில் அப்ளிகேஷனைச் சமர்ப்பித்தோம். அதைப் பெற்றுக் கொண்ட 'நன்' அம்மையார் பெண்களைக் கவனிப்பதை நிறுத்தி, எங்களைக் கவனித்து ஒரு நொடியில் அனுப்பி வைத்துவிட்டார். —'மாசா'

---

ஒரு சாதாரணக் காகிதத்தின் மீது ஒரு சொட்டுத் தண்ணீர் விழும்படி செய்யுங்கள். விழ்ந்த தண்ணீர் காகிதத்தில் உடனே பரவுவதில்லை. சற்று நேரம் கழித்து விழ்ந்த இடத்தில் ஊறியதோடு நின்று விடுகிறது. இது "உலர்ந்த தண்ணீர்". நெருப்பணைப்பதற்கு இப்போது நெசவுத் தொழில் அளித்த கண்டுபிடிப்பின்படி தண்ணீரின் குணம் வேறு. இதில் ஒரு சொட்டு எடுத்து அதே மாதிரிக் காகிதத்தில் விழச் செய்யுங்கள். விழ்ந்த தண்ணீர், அந்தக் காகிதத்தில் எல்லாத் திசைகளிலும் மிக மிக விரைவாக ஊடுருவிப் பரவுகிறது. இதுதான் "ஈரத் தண்ணீர்" என்கிறார்கள் நிபுணர்கள்.

நெசவுத் தொழிலில் சாயம் போட உபயோகமாகி வரும் ரசாயனக் கலவைகள் ஏராளமாக உண்டு. நூலில் சாயம் ஏற்றத் தாழ்வு இல்லாமல் ஒரே அளவாகப் பரவ வேண்டும். கூடவே, நூலின் எல்லாப் பகுதிகளிலும் ஊடுருவிப் பரவி நிற்க வேண்டும். இதற்கெல்லாம் ஏற்ற வகையில் நெசவுத் தொழிலில் வண்ணமிடுவதற்கென்று பல ரசாயனக் கலவைகள் இருந்து வருகின்றன. தீயை அணைக்கும் பணிக்கு இவற்றில் சில ரசாயனப் பொருள்கள் பயன்படக் கூடும் என்று அகஸ்மாத்தாகக் கண்டுபிடித்தார்கள். சோதனைக் கூடங்களில் ஆராய்ந்த பின் இவற்றில் சுமார் முப்பது ரசாயனக் கலவைகளைத் தேர்ந்தெடுத்தார்கள். இவற்றைக் கொண்டு தீயை அணைப்பதற்கென்று தனியாக ஒரு திரவ ரூபமான கலவையைத் தயாரித்து மூலாம் பூசிய பெரிய டிரம்களில் நிரப்பினார்கள். இந்தக் கலவையை எங்கு வேண்டுமானாலும் சுலபமாக எடுத்துச் செல்லலாம், நூறு காலன் தண்ணீருக்கு ஒரு காலன் கலவை என்ற அளவில் கலந்து, நெருப்பு பற்றிய இடத்தின்மீது தண்ணீரைச் சாதாரணமாகப் பீறிட்டு அடிக்கச் செய்தால் வெளியே பாயும் தண்ணீர், எரியும் பொருளின் உள்ளும் புறமும் நன்கு ஊடுருவிச் சென்று, தான் சென்ற இடம் முழுவதையும் தெப்பலாக நனைந்து விடுகிறது.

காவென்டரி நகரில் மரம் அறுக்கும் தொழிற்சாலையில் மூண்டுவிட்டது பெருந் தீ. எங்கு பார்த்தாலும், மரப் பலகைகளின் அடுக்குகள்! தரையில் மரம் இழைத்த சிராய்த் தூள்கள்... இந்தச் சுற்றுச் சூழல் நிலைமையில் பிடித்துக் கொண்டது தீ. அதை மிக வெற்றிகரமாக இந்த "வெட்" முறையால் அணைத்து விட்டனர். இந்தத் தீயை அணைப்பதில் ஈடுபட்ட தீ அணைப்பு அதிகாரி திரு ஹில் நடந்ததை விவரிக்கிறார்:

"தீயை அணைப்பதற்கு 650 காலன் தண்ணீருடன்தான் அங்கு விரைந்தோம். தீ ஜ்வாலைக்கு அடியில் இரண்டு இடங்களில் குழாய்களைத் திருப்பி விட்டு, அதிகத் தண்ணீருக்கான இடத்தைக் கண்டுபிடிக்குமாறு என்னுடைய உதவியாளர்களிடம் கூறினேன். சுமார் 1200 அடி தூரத்தில் தண்ணீர் இருப்பது தெரிந்தது. அங்கிருந்து ரப்பர்க் குழாய் மூலமாகத் தண்ணீர் வருவதற்கு அவர்கள் ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்புவதற்குள் இங்கே நெருப்பை அணைத்தாகி விட்டது! 1200 அடி தூரம் சென்று அவர்கள் திரும்பும் நேரத்துக்குள் நிகழ்ந்த அதிசயம்தான் இந்த வெட் முறை சம்பவம். இது மட்டுமல்ல; தீப்பிடித்த மரக் குவியல்களின் அடியில் உள்ள தரையே இரண்டரை அங்குல ஆழத்துக்கு நனைந்து விட்டது..."

சாதாரண முறையில் நெருப்பை அணைக்கும்போது செலவாகும் தண்ணீரில் பாதி அளவு இருந்தாலே பனிப் படல முறை மூலம் நெருப்பை அணைத்துவிடலாம் என்று கண்டுபிடித்தார்கள். இப்போது 'வெட் வாட்டர்' முறையின் மூலம் இன்னும் குறைந்த அளவு தண்ணீரைக் கொண்டு பெரிய தீயை அணைத்துவிட முடியும் என்று நிரூபித்து விட்டார்கள்.

எனவே, தண்ணீர்த் தட்டுப்பாடு மிகுந்த கிராமப்புறங்களுக்கு இந்த வெட் வாட்டர் தீயணைப்புத் திட்டம் வந்தால் நல்லதிருஷ்டம் என்று கூறலாம். குறைந்த அளவு தண்ணீரை உபயோகிப்பதில் மற்றொரு நன்மையும் இருக்கிறது என்கிறார்கள், 'வெட் வாட்டர்' முறையைத் தேடித் தந்த நிபுணர்கள். நெருப்பு மூண்ட இடங்களில் அதை அணைக்கும் தண்ணீரினாலும் சில பொருள்களுக்குச் சேதம் ஏற்படுவதுண்டு. இந்த வெட் வாட்டர் திட்டப்படி குறைந்த அளவு தண்ணீரே பயன்படுத்தப்படுவதால் தீப்பிடித்த இடங்களில் தண்ணீர் விளைவிக்கும் சேதமும் குறைவாகவே ஏற்படுகிறதென்று அந்த நிபுணர்கள் கூறுகிறார்கள்.

ஆதாரம்: **அமெரிக்காவிலுள்ள நேஷனல் ஸேஃப்டி கௌன்ஸில் வெளியீடு**




## 15. அன்புப் பரிசு!

மின்வண்டியின் ஓட்டத்தில் உடம்பு குலுங்கியவாறே அமர்ந்திருந்தாள் சீலியா. அவளுக்கு எதிர்த்தாற் போல் வசந்தன் உட்கார்ந்திருந்தான்.

வசந்தன் மெல்லிய குரலில், ''என் அம்மாவைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?'' என்று சீலியாவைப் பார்த்துக் கேட்டான்.

''மிக உயர்ந்த ஆத்மா!'' ஆங்கிலத்தில் விடையளித்தாள் அவள். அவள் பேச்சில் நிதானமும், அவன் கூறப் போவதை அனுமானிக்கும் சாமர்த்தியமும், மன உணர்வில் ஓரளவே வெளியிடத் துணிவும், வெட்கமும் கவிந்திருந்தன.

''உன்னோடு சரிவரப் பேச முடியாமல் போய்விட்டதற்கு அம்மா நிச்சயம் வருந்துவாள்.''

''அதனுலென்ன? இத்தனை பேச்சிலேயே அவர்களின் கருணையும் அருளும் புலப்படவில்லையா? இது போதாதா?'' என்ருள் சீலியா.

இறங்க வேண்டிய இடம் வந்துவிட்டது. இருவரும் மேம்பாலத்தில் ஏறி இறங்கி வெளியே வந்தனர்.

எதிரே இருந்த நவீன வசதி சிற்றுண்டிச் சாலை அவர்களை இழுத்தது. உள்ளே சென்று சௌகரியமான இடம் தேடி அமர்ந்ததும், வசந்தன் காத்திருந்த சிப்பந்தியிடம், ''இரண்டு கட்லெட், இரண்டு பீச் மெல்பா'' என்று ஆர்டர் கொடுத்தான். ஒன்று சுடச் சுட வந்தது. இரண்டாவது சிலீரிட்ட பனிப்பில் குளித்து நின்றது.

பச்சை, சிவப்பு, வெண்மை நிறங்கள் கலவையிட்ட பீச்மெல்பாவில் கடிபட்ட பருப்பு வகைகளை முன் பற்களால் மென்றவாறே நிமிர்ந்த சீலியா திடுக்கிட்டாள். தள்ளு கதவின் திறப்பில் குழலியும், இன்னொரு பெண்ணும் உள்ளே வந்தனர். 'ஐயோ, அவள் பார்த்துவிட்டால் என்ன செய்வது? வசந்தனோடு தன்னைப் பார்த்தால், குழலி என்னதான் நினைக்க மாட்டாள்? இத்தனை நாட்களும் இல்லாத விதமாய் இப்படி வந்தது தவருகி விட்டதே!' சீலியா தன் சலனத்தை மறைத்தவாறே தலையைத் தாழ்த்திக் கொண்டாள். நல்ல வேளை! குழலியும், அவள் தோழியும் சீலியாவின் பக்கம் திரும்பாமலே, வேறு பகுதிக்குச் சென்றுவிட்டனர். சீலியா சட்டென இடத்தை விட்டு எழுந்தாள். வசந்தன் வியப்போடு பார்த்தான். 'ஏன்' என்ற கேள்

லிக் கொக்கி அவன் முகத்தில் தெரிந்தது.

''தெரிந்தவர்கள்.... சீக்கிரம் வெளியேறிவிடலாமா?'' என்று தவித்தாள் சீலியா.

வசந்தன் அவளது உணர்ச்சிக்குரிய மதிப்புக் கொடுத்தான். அடுத்த ஐந்தாம் நிமிடம் அவர்கள் இருவரும் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தனர். இருவருக்குமான பஸ் வந்த போது சீலியாவின் தயக்கத்தைப் புரிந்து கொண்டாற் போல் அவன் ஏறாமல் நின்று கொண்டான். அவள் மட்டும் நன்றியோடு பஸ்ஸில் ஏறிக் கொண்டாள். என்னதான் நேர்மை வழி ஒழுகினாலும், பிறர் கண்ணுக்குக் குற்றமாகப் படாதிருக்க நடிக்கவும் வேண்டியுள்ளதே!

ஃ ஃ ஃ

**வி**டுமுறையில் சென்றிருந்த பாரதி திரும்பி வந்த பொழுது சீலியாவிடம் ஒரு மாறுதலைக் கண்டாள். திகைத்தாள். ''நீயில்லாத இந்தத் தனிமை என்னைத் தின்றுவிட்டதடி, பாரதி!'' என்று எப்பொழுதும்போல் சீலியா அவளை வரவேற்கவில்லை. தன்னைப் பிரிந்திருந்த நாட்களில் தனிமையை அணு அணுவாக ருசித்து ரசித்த பாவம் தெரிந்தது. அரும்பாக விட்டுச் சென்ற ஒன்றை மென்மையான விரிந்த மலராகப் பார்க்கும் பிரமை ஏற்பட்டது.

''ஏண்டி, உள்ளத்தில் கள்ளம் புகுந்து விட்டதா?'' பரிகாசமாகக் கேட்டாள் பாரதி.

சீலியா மென்று விழுங்கினாள்.

''சொல்லா விட்டால் போயேன்! எல்லாவற்றையும் சொல்ல ஆளா இல்லை? ஒரு பட்டாளமே உன் கதையைச் சொல்லத் தயாராகி விடும், நான் கேட்கப் போனால்!''

''வேண்டாமடி, நானே சொல்லி விடுகிறேன். அவர்.... அவர் மாலையில் என்னைச் சந்திக்க வருகிறாரடி!''— நாணத்தில் பூத்துப் பொலிந்தாள் சீலியா.

''அட சட்! என்னடீது? பெரிய எழுத்தாளி. இப்படி எடுத்ததும் 'சஸ்பென்ஸை' உடைத்து விட்டாயே! படிப்படியாகக் கிளைமாக்ஸுக்கு வருவாயா? இப்படி விண்டு கூறிச் சுவாரசியத்தைக் கெடுத்து விட்டாயே!''

ஒரு பெண்ணின் வாழ்வில் நடந்ததை யெல்லாம் விஸ்தாரமாகக் கேட்டு அறிய இன்னொரு பெண்ணுக்குத்தான் எத்தனை ஆசை!

''நீ எப்படிச் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறாயோ, அது எனக்கு விளங்கவில்லையே!''

''நீ கதை எழுதுகிறவள் என்னைக் கேட்கிறாயா? அதாவது..... நீயும் அவரும் வார்டுக்குச் செல்லும் போது மட்டும்தான் சந்திப்பீர்கள். உம், ஆரம்பியேன். ஒருநாள்... மாலை நேரம்....சூழ்நிலையில் இனிமை கலந்து கொண்



டிருந்தது.... அப்போது...'' என்று தூண்டினுன் பாரதி.

''ஆகா ! என்ன அபாரக் கற்பனை ! வெரி வெல் ! மார்வலெஸ், டெரிபிள்!''

''நீ என்னடி, நான் ஆரம்பித்துக் கொடுத்தால்கூடத் தொடர மறுக்கிறாய்......!'' பாரதிக்கு உண்மையிலேயே சேலி மறைந்து பொறுமையின்மை வந்து விட்டது.

''ஒரு நாள்.....'' சிலியா பிரயாசையோடு தொடங்கினுள்.

''உம்! ஒருநாள்... என்ன?... சொல்லு!'' அதட்டினுன் பாரதி.

''காலை பத்து மணிக்கு அவரிடமிருந்து 'போன்' வந்தது.''

''நீ உடனே கிளுகிளுத்துப் போய் லீலாவுக்கும், சங்கரனுக்கும் பேசச் சந்தர்ப்பமே கொடுக்காமல் பேசிக்கொண்டே இருந்தாயாக்கும்....''

''கொஞ்ச நேரம்தான் பேசினேம்.''

''எத்தனை தடவைகள் அப்படிப் பேசினுய் ?''

''ஒரே ஒரு முறை !''

''பொய்.''

''இல்லை. உண்மை.''

''அப்புறம் ?''

''ஒரு நாள் மாலை என்னைப் பார்க்க வந்தார்.''

''உம். மேலே......!''

''அப்புறம் ஒன்றுவிட்டு ஒரு நாள் வர ஆரம்பித்தார்.....!''

''அது என்ன கணக்கு, ஒன்றுவிட்டு ஒரு நாள்?''

''அவர் 'மதுரை' ஸானடோரியம் சென்று பார்க்க ஒரு நாள்....''

''ஓ! ஐ ஸி! உன்னைப் பார்க்க ஒரு நாள்.... மேலே.....!''

''அப்புறமென்ன ? ஓ ! மறந்து விட்டேனே ! ஒரு நாள் நானும்



ஸானடோரியம் சென்று அவர் அம்மா வைப் பார்த்து வந்தேன்....''

''வெரிகுட்! கெட்டிக்காரி! நான் ஊருக்குப் போய் வருவதற்குள் பிர மிக்கத்தக்க இத்தனை மாறுதலா? அங்கே உனக்கு மனப்பூர்வமான வர வேற்பும், மனம் நிறைந்த ஆசீர்வாத மும் கிடைத்தனவா?''

''நான் போன அன்று அவர்களுக்கு உடம்பு சரியில்லை.''

''ஆ! ஐயோ, பாவம்! அப்புறம்?''

''அப்புறம் என்ன, அவ்வளவுதான்!''

''அவ்வளவேதானா?''

''உம்.... ஸானடோரியம் சென்று திரும்பும் போது அவர் பிடிவாதமாக ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றார்.''

''பார்த்தாயா....? ஒன்று ஒன்றாகக் கேட்கக் கேட்கத்தானே வெளிப்படு கிறது. உம்! சினிமா, கினிமா.....!''

''அத்தனை தூரத்துக்கு என்னைத் தப்பாக நினைக்காதே, பாரதி!....''

''எது தப்பு...? இத்தனை தூரத் துக்குப் போனபின்பு இது ஒன்றுதான் தவறா?''

''நீ என்ன சொல்கிறாய்?'' திடுக்கிட் டாள் சீலியா.

''நான் இங்கே இல்லாமல் உனக்கு எத்தனை சர்வ சுதந்திரம் வாய்த்து விட்டது, பார்த்தாயா?''

''நான் என்ன தவறுசெய்து விட்டே னாம்....?''

''தவறு செய்பவர்கள் தாங்கள் செய்ததைத் தவறு என்று என்றுமே ஒப்புக் கொள்வதில்லை.''

சீலியா பதில் பேசவில்லை.

''திறந்து கிடக்கும் பெட்டகமாகப் பெண்கள் பத்திரமின்றி ஆண்களை நெருங்கி விடுகிறார்கள். கல்வி போதிக் கும் அறியாமை இது!''

சீலியா சிந்திக்கலானாள்.

''அந்தப் பாதுகாப்பின்மையை அன்பென்னும் ஆசை காட்டி ஆண்கள் உபயோகித்துக் கொள்கிறார்கள்.''

''வசந்தனைப் பற்றி அப்படியா நினைக்கிறாய், பாரதி?''

''உன் வசந்தன் மட்டுமென்னடி, இந்த உலகத்தில் நாம் பார்க்கும் ஆண்கள் எல்லோருமே தங்கள் தங்கள் சுயரூபத்தோடு இயங்கவில்லை. உருவம் வேறு, உள்ளம் வேறாகத்தான் நடந்து கொள்கிறார்கள். சுயரூபம் அவர்களது காரிய சாதனைக்கப்புறமே புலப்படும்.''

''இப்படியெல்லாம் நீ தூர இருந்து எண்ணுகிறாய். வசந்தனைப் பற்றி அப்படி எண்ணாதே, பாரதி. அப்படி என்னால் எண்ணச் சாத்தியமில்லை......''

''தவறு செய்பவர்கள் எல்லாரும் தமக்குத் தனி நீதி வகுத்துக் கொண் டால் சரியாயிற்றா? போகட்டும், வசந்தன் அப்படிப்பட்டவரில்லை என்றே உன் விருப்பப்படி வைத்துக் கொள் வோம். அதற்காகக் கண்ணியத்தை விட்டு விலகி இத்தனை தூரம் போயிருக்க வேண்டுமா?''

சீலியா சாவதானமாகத் தான் அநுபவித்த பாவத்தைச் சொற்களில் குழைத்து வெளியிட்டாள். ''என்ன செய்வது? எல்லோரது மனத்திலும் அன்பு பூத்துவிட இடம் இருக் கிறதே! ஆசையின் ரகசியங்கள் உயிர்க்கக் கரு இருக்கிறதே. கொஞ்சம் கூட இடம் மீதியில்லாமல் அன்பு பம்மிப் படர்ந்து விடுகிறதே....''

''வெரிகுட்! அதற்கும் ஒரு பதில் தயாராக வைத்திருக்கிறாயா? இப்படி முந்திரிக் கொட்டையாகப் பேசி எதி ராளியை வீழ்த்திவிட வேண்டும் என் பது உன் தந்திரம் போலும்.''

''இதில் தந்திரமென்ன? மலை யருகே சென்று நீ எத்தனை தடை விதித்தாலும், சூல் கொண்ட மேகங்கள் பொழியும் நீர், அருவியாய் இறங் காமல் நின்று விடுமா? அரும்பெடுத்த செடியருகே போய் நீ மலராதே என்று மண்டியிட்டுக் கிடந்தாலும் அவை பூத்துச் சொரியாமல் நின்றுவிடுமா?''

''உவமைகளை அடுக்காதேடி, கதை எழுதுகிறவளே! வெறும் உவமை களால் விவாதத்தை வென்றுவிட லாம்; உண்மைகளை வெல்ல முடியாது... உவமைகளை இலக்கிய ருசிக்காக ரசிக்க லாம். அவ்வளவே....!''

''நீ வெறும் பேச்சாலேயே உலகை வென்று விடுவாயே! நான் உவமை களால் உன்னை வெல்வதெங்கே?'' என்று அலுத்துக் கொண்டாள் சீலியா.

''நீ செய்ததெல்லாவற்றையும்கூட மன்னித்து விடலாம். வசந்தனின் தாயைப் பார்க்கப் போகுமளவுக்கு என்ன இறுக்கம் வந்தது உனக்கு? அந்தம்மா உன்னை எந்தக் கண் கொண்டு பார்த்திருப்பாள் தெரியுமா?''

''அவர்கள் மிகவும் அன்பாகவே பழகினார்கள். அன்போடு ஓர் ஆப்பிள் கூடத் தந்தார்கள்.''

''அதில் என்னத்தையடி கண்டு விட்டாய்? முன்பின் தெரியாத ஒரு பெண் மகனோடு வருகிறாள் என்றால் எந்தத் தாயும் மகிழ்ந்துவிடமாட்டாள். தெரியுமா? இப்படிப்பட்டவளா இவள் என்றுதான் வருந்துவாள்.''

சீலியா பதில் பேசவில்லை.

''நீ போன போது வசந்தனின் தாய்க்கு உடம்பு சரியில்லாமல் இருந் திருக்காது. உன்னைப் பார்த்தகணமே, அவர்கள் மனம் விண்டு போயிருக்கும்.

அதைச் சமாளிக்கவே அப்படிக் கூறி இருக்கலாம். இல்லையா ?''

''இல்லை, இருக்காது'' என்று அவள் வாய் மொழிந்தாலும் இதயத்தில் நுட்பமான வலி ஊடுருவியது. அந்த வேதனையை வெளியில் தெரியாமல் மென்று விழுங்கிச் சமாதானப் படுத்திக் கொண்டாள்.

''ஓ. கே. உன் நம்பிக்கை வாழட்டும்'' என்று வாழ்த்தினாள் பாரதி. ''ஆனால் எதற்கும் எல்லை மீறாதே. நீ கப்பலில் போகிறாய். கரை சேரும் வரையில் நேரப் போகும் புயலுக்கும், திசை மாற்றத்துக்கும் தயாராக இரு.''

''என் அருமைத் தோழி, உனக்கு மிக்க நன்றி'' என்றவாறே சீலியா பாரதி ஊரிலிருந்து கொண்டு வந்திருந்த தேங்காய் பர்பி ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு உரிமையோடு உண்ணத் தொடங்கினாள்.

''இன்னும் என்ன கொண்டு வந்திருக்கிறாய்? உன்னோடு விவாதித்ததில் அகோரப் பசி ! இந்த நிலையிலும் நமது ஹாஸ்டல் சாப்பாட்டை நினைத்தால் பசி அடங்கிப் போகிறது !'' கோவையான நகை உதிர்கிறது.

''இதோ, தேன்குழல் இருக்கிறதே, இந்தா !'' என்று அதைக் கொடுத்த பாரதி, ''சீலியா! உன்னை இத்தனை தூரம் கண்டித்ததற்குக் கோபிக்கவில்லையே ! நீ கொடுக்கும் உரிமையின் கண்டிப்புத்தான் இது.....'' என்றாள்.

''ஆரம்பித்து விட்டாயா, உன் பழைய பல்லவியை ! ஆரம்பத்தில் சூரத்தனமாய்ப் பேசுவது, பின்னர் சரணாகதி. நீ இத்தனை உரிமையாக என்னைக் கண்டித்து 'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக் கண் மேற்சென்றிடித்தற் பொருட்டு' என்ற மனப்பாடம் ஆகி மறந்திருந்த குறட்பாவை ஞாபகப்படுத்தியதற்கு எத்தனை மகிழ்கிறேன், தெரியுமா ?''

''ஓ ! கேலி பண்ணுகிறாயா ?''

''மெய்யாக இல்லை. நான் நிஜமாகத் தவறு செய்திருந்தால் ஒருவேளை உன் கண்டிப்பில் கோபம் கொண்டிருப்பேனோ என்னவோ ?''

''அதென்னடி நிஜத் தவறு ? அப்படியானால் பொய்த் தவறு என்று ஒன்று உண்டா ?''

''ஏன், ஒன்றைத் 'தவறு' என்று கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதற்குப் பொய்த் தவறு என்றுதானே பெயர்?''

''இந்தச் சாக்கில் உன் தவறை நியாயமானதாக மாற்ற முயல்கிறாய்.''

''இல்லை, இல்லை. ஒரே விதமான செயல்கள் இருவேறு முனைகளில் ஒன்று தவறாகவும், மற்றொன்று நியாயமாகவும் இருப்பதில்லையா ? ஒரு வேளை பசிக்குத் திருடும் ஏழையின் தவறு பொய்த் தவறு. பகட்டுக்காகச் செல்வம் சேர்க்கத் திருடும் வியாபாரியின் தவறு நிஜத் தவறு. இதுவே என் தீர்ப்பு.''

''ஒழுங்குதான். எந்த விதத்திலும் தவறு ஒன்றுதான். பிரபல வக்கீல் ராகவனின் மகள் சொல்கிறாள் என்பதற்காக உலகம் உன் தீர்ப்பை ஏற்கப் போவதில்லை'' என்றாள் பாரதி.

(தொடரும்)

## முந்திரிக் கொட்டை விஷயம் !

புதுடில்லியில் நடந்த உலக மகாநாட்டில் 121 நாடுகளிலிருந்து வந்த 1600 பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். 44 வர்த்தக நிறுவனங்களும் பங்கு கொண்டன. மகாநாட்டுக்காக ஒரு கோடியே நாற்பது லட்சம் ரூபாய் செலவழிந்ததாம்! 55 டன் காகிதம் செலவாயிற்று. ஏனெனில் மொத்தம் 3000 விஷயங்களைப் பற்றி ஐந்து மொழிகளில் பிரதி எடுக்க வேண்டியிருந்தது. முப்பது இயந்திரங்கள் பிரதி எடுக்கும் வேலையைச் செய்தன. இரவு பகல் 24 மணி நேரமும் அவை வேலை செய்து மொத்தம் இரண்டு கோடி பக்கம் விஷயங்களைப் பிரதி எடுத்தன. மகாநாட்டில் ஐ. நா. காரியாலயத்தைச் சேர்ந்த 560 பேர்களும் டில்லி அட்கன் 500 பேர்களும் வேலை செய்தார்கள். கடைசி நாள் அன்று பிரதிநிதிகள் ஒவ்வொருவருக்கும் முந்திரிப் பருப்பு அடங்கிய பை ஒன்று பரிசாகக் கொடுக்கப்பட்டது. ஏனெனில் நமக்கு அந்நியச் செலாவணி அதிகமாகச் சம்பாதித்துக் கொடுக்கும் பொருட்களில் முந்திரிப் பருப்பும் ஒன்று. வருஷத்துக்கு அதனால் நமக்கு 20 கோடி ரூபாய் அந்நியச் செலாவணி கிடைக்கிறது!



ஆதாரம்: ''ஹிந்துஸ்தான் டைம்ஸ்' தகவல்: சரோஜா ராமச்சந்திரன்




## பேராதனைப் பூங்காவனம்

உலகப் பிரசித்தி பெற்ற 'பேராதனை தாவர இயல் பூங்கா' இதுதான். இந்தப் பூங்காவனத்திலே விண்ணைத் தொடும் எழில் மிகுந்த மரங்கள் சாரிசாரியாக அணிவகுத்து நிற்பதைப் போல, மண்ணோடு மண்ணாக மலர்ந்துள்ள மலர்க் குவியல்களும் உண்டு!

உலகின் பல பாகங்களிலிருந்தும் கொண்டு வரப்பட்டுள்ள எல்லாவிதமான தாவரங்களும் வளர்கின்றன.

பல காவலர்கள் உண்டு. இந்தக் காவலர்களுக்குத் தெரியாமல் ஒரு மலரைக்கூட இங்கிருர்து கொய்து வர முடியாது. இந்தப் பூங்காவைக் காரிலே சுற்றிப் பார்க்கவே அரை மணி நேரமாகும். அத்தனை பெரியது.

சிர்தை கவரும் இர்த எழில் மிகுந்த வனத்தின் எல்லைக் கோட்டிலே இலங்கையின் மிகப் பெரிய ஆறான 'மாவலி கங்கை' செம்மண் நிறத்தோடு நுங்கும் நுரையுமாகப் பெருக்கெடுத்து ஓடுவது கண்கொள்ளாக் காட்சி.

- கே. வி. எஸ், மோகன்

# உங்களுக்கான குளுமையான நறுமணத்தின் "முத்திரை"

# எக்லா உன்னதமான புதிய டால்க்

நிரந்தரமான நறுமணம்...எக்லாவின் புத்துணர்ச்சி அளிக்கும் உயர்ந்த தன்மை! உபயோகித்துப் பாருங்கள்! இதன் ஆனந்தமான புத்துணர்ச்சி உங்கள் உடம்பு முழுவதும் பரவி இருப்பதை உணருங்கள். இது தான் குளுமையான நறுமணத்தின் முத்திரை. நாள் முழுவதும் நீங்கள் நிகரற்ற அழகுடன் விளங்க தயாரிக்கப்பட்டது. இன்றே எக்லா வாங்குங்கள். தினமும் உபயோகியுங்கள்.




கால்கேட்டின் உன்னதமான தயாரிப்பு.

EC.G.4.TAM



# நேர் வழி!

குதிரைகள், நாய், சிங்கங்கள், பாம்புகள், தேள் முதலிய ஜீவராசிகளோடு ஜயசங்கர், நாகேஷ், மனோகர், சுந்தரராஜன், ஆனந்தன், வாணிஸ்ரீ, விஜயலலிதா, சந்திரகாந்தா,—மாஸ்டர் பிரபாகரன் ஆகியவர்களும் நடித்திருக்கிறார்கள். மனிதர்களை விட மற்ற ஜீவராசிகள் பிரமாதமாக நடித்திருக்கின்றன!

படத்தில் மூன்று சாவுகள்: இரண்டு வில்லன்களும், அபலைத் தாயும் சிங்கத்தினால் கொல்லப்படுகின்றனர். சப்ஜாடா குளோஸ்! வாழ்க, சிங்கங்கள்!

நாயும், குதிரையும் கதாநாயகனுக்குப் பலவிதத்திலும் உதவிக் காப்பாற்றுகின்றன. நல்ல நடிப்பு. சிறந்த டைரக்ஷன். ஜயசங்கர் மிகவும் சமத்காரமாகச் சண்டைக் காட்சிகளில் வீரமும் தீரமும் காட்டி நடித்திருக்கிறார். மனோகரின் நடிப்பு மெச்சும்படி யிருக்கிறது. சண்டைக் காட்சிகளில் சக்கைப் போடு போட்டிருக்கிறார். நடிப்புக்கு முதலிடம் மாஸ்டர் பிரபாகரனுக்குத்தான் தரவேண்டும்.

வாணிஸ்ரீ முற்பகுதியில் ஆண் உடையில் கவர்ச்சியாகத் தோன்றிக் குதிரை சவாரி செய்து காதலித்துப் பிற்பகுதியில் புடவை கட்டிக் கொண்டு கண்ணீர் விடுகிறார். அவ்வளவுதான்! கணவனால் கைவிடப்பட்ட காரிகை சந்திரகாந்தா. ஆகவே, கண்ணீருக்குப் பஞ்சமில்லை. நன்றாய் நடிக்கிறார்.

விஜயலலிதாவின் ஆபாச நடனம் படம் பார்ப்பவர்களைத் தலை குனிய வைக்கிறது: அதிகப்பட்சமாக நீண்டு அலுக்கவும் வைக்கிறது.

நாகேஷ் — மனோரமா தமாஷ்கள் நன்றாயிருக்கின்றன. பாடல்கள் படத்தின் வேகத்தைத் தடுத்து நிறுத்தி வேதனை தருகின்றன.

ஒரு படத்துக்குத் தேவையான அனைத்துப் பொழுதுபோக்கு அம்சங்களையும் ஒருங்கே கொண்டு அனைவரையும் மகிழ்விக்க முயலும் அசம்பாவிதமான சித்திரம். நேர்வழி—தேவருக்குத் தெரிந்த ஒரே வழி!

# ஓநாய்க் கோட்டை

27

கதை
வாண்டுமாமா
சித்திரம்
ரமணி..

தோழர்களே நீங்கள் தேடும் நமது விரோதிகள் இப்போதுதான் அந்தப் பக்கமாகப் போகிறார்கள். சீக்கிரம் பின் தொடர்ந்து செல்லுங்கள். இவர் எங்களுக்கு வேறு பணியளித்திருக்கிறார்...

வாருங்கள்.. விரைந்து சென்று அவர்களைப் பிடிப்போம்...

நல்ல வேளை. அவர்கள் சந்தேகிக்கவில்லை.

ஆனந்தா முதலில் உன் மனைவியைச் சிறை மீட்போம். பிறகு ஓநாய்க் கூட்டத் தலைவனைக் கவனிப்போம். அப்போதுதான் உன் மனைவியைப் பணயமாக வைத்து அவன் நம்மைப் பழி வாங்க வாய்ப்பிருக்காது.

உண்மைதான் ஆனால் என் குமதி எங்கிருக்கிறாள்? எப்படி அவளை மீட்பது?

அவள் இருக்குமிடம் எனக்குத் தெரியும். ஆனால் அவளை விடுவித்துக் கொண்டு வர என்னால் முடியாது. அதற்காகவே உன் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தேன். ஆனால் ஆனந்தா இப்போதே எச்சரிக்கிறேன். உன் மனைவியைச் சந்திக்கும் போது உனக்குச் சில அதிர்ச்சிகள் காத்திருக்கும்....

நாமகேதுவோடு ஆனந்தனும் கந்தனும் இருநாள் முழுவதும் பிரயாணம் செய்து ஓர் அதிசயமான நகரத்துக்கு வருகிறார்கள். அந்நகரிலே மனித சஞ்சாரமே இல்லை..

பாழடையாமல் ஆனால் மனிதர்களே இல்லாத இந்நகரம் விநோதமாக இருக்கிறதே..

இரு.. ஏதோ ஒலி..! மனிதர்கள் நடந்து வருவது போலில்லை?

ஓநாய்த் தேவன் ஆலயமையும் கோட்டையையும் காக்கும் காவல் படையினர் நம்மைக் கைது செய்ய வருகிறார்கள். எதிர்க்க வேண்டாம்

நில்லுங்கள் அப்படியே! இந்தப் புனிதமான இடத்துக்கு வர உங்களுக்கு அருகதையில்லை.

ஓநாய்த் தோழர்களுக்குத் தொண்டு வேலை செய்யும் கயவனே! நீயா இவர்களை இங்கு அழைத்து வந்தாய்? துரோகி.

கைது செய்து இழுத்துச் செல்லுவோம்...

நாமகேது, உன் திட்டமென்ன? நாம் சிறைப்பட்டு அடிமைகளாக வாழ்வதா?

அவசரப் படாதே...

வேகமாக நடவுங்கள்... ம்....!

அரண்மனையின் பொது மண்டபத்தில் நுழைந்தவர்களுக்கு....

ரூபா...ரூபமதி...! நீயா...நீ...? இது என்ன வேஷம்?

நில் அப்படியே! கண்டபடி பிதற்றாதே. ஓநாய்த் தேவனின் அருள் பெற்ற எங்கள் ராணிக்கு மண்டியிட்டு மரியாதை செய் முதலில்....

உங்கள் ராணியா? ஹஹ..ஹஹ..ஹா! பிதற்றுவது நானல்ல அப்பனே! அந்தக் காரியத்தைச் செய்வது நீதான். என் மனைவிக்கு நான் மண்டியிடுவதா? அது எங்கள் பழக்கமில்லை....

சேனாபதியாரே! அந்த அந்நியனுடன் வீண் வார்த்தை வேண்டாம்.

நாடோடி வாலிபனே! சுய நினைவுடன் தானா இருக்கிறாய்? மனைவியை இழந்த ஏக்கத்தில் பார்க்கும் பெண்களெல்லாம் — உன் மனைவியாகத் தெரிகிறார்களோ?

மகாராணி! புனிதமான நம் இடத்துக்கு வந்த இவ்வற்பர்களை நம் வழக்கப்படி...

ரூபமதி! என்னிடமா இப்படிப் பேசுகிறாய்? புத்தியின் நினைவிழந்து மதியிழந்து போயிருப்பவள் நீதான்.

சாதுர்யமான பேச்சு! ஆனால் நினைவிருக்கட்டும். நீங்கள் காண்பது சூன்ய நகரின் ராணி! ஓநாய்த் தேவனின் அருள் பெற்றவள். உன் கேலிக் கூத்தான பேச்சுக்களுக்கு இத்தனை நேரம் அனுமதி... யளித்ததே அதிசயம். சேனாபதியாரே...!

இங்கு வந்தவர்கள் செத்து மடிய வேண்டும் அல்லது எங்களுக்கு அடிமையாகி நாங்கள் இடும் கட்டளைப்படி உழைக்க வேண்டும். அப்படித் தானே...

இந்தக் கயவர்களை நாம் அடிமையாகக் கொள்ள வேண்டாம். செத்து மடியட்டும் அதுவே சிறந்தது.

இது என்ன விந்தை! உருவத்தில் என் ரூபமதி ஆனால் அவள் சொல்லும் செயல்களுமோ? இதைக் காணவா இத்தனை பாடுபட்டு வந்தேன்? இல்லை இவள் மந்திரத்தால் கட்டுண்டு மயங்கி — கிடக்கிறாள்.

இதுவரை யாருக்கும் நான் இம்மாதிரிச் சலுகை காட்டியதில்லை. அடிமைப்பட விருப்பமா, அல்லது ஆவி துறக்கச் சித்தமா?

நாங்கள் யாருக்கும் அடிமையாகி வாழ மாட்டோம். எங்கள் ஆவியைப் பறிப்பதும் அத்தனை சுலபமல்ல ராணியாரே...

தொடரும்...



## கல்கெமிகோவின்

# காந்தரிடின் ஹேர் ஆயில்

# கேந்தரால் (ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்)

உங்கள் கேசத்தின் குறைவற்ற வளர்ச்சிக்கு, நேர்த்திக்கு, உறுதிக்கு கல்கெமிகோவின் நறுமணமிக்க காந்தரிடின் ஹேர் ஆயில் "கேந்தரால்" பயன்படுத்துங்கள்.

"கேந்தரால்" பொட்டு உதிர்தலைத் தடுக்கிறது. கேசத்தின் வேர்களுக்கு ஊக்கமூட்டுகிறது. அது கேசத்தின் செழுமைக்கான புஷ்டியளிக்கும் சிறந்த டானிக்—காந்தரிடின் மற்றும் ஆலிவ் எண்ணெய் உட்பட்ட வற்றுத வளர்ச்சிக்கான தாவர எண்ணெய்களை உள்ளடக்கியதாகும்.

*தயாரிப்பாளர்; கல்கத்தா கெமிகல்*

CCK 2997

# வீடு இழந்தோர்க்கு ஓடுகள்!

"தனியார் தொழில் நிறுவனத்துக்கும், சர்க்கார் தொழில் நிறுவனத்துக்கும் உள்ள வித்தியாசம் என்ன தெரியுமா? சர்க்கார் தொழில் நிறுவனங்களில் பலலட்சக்கணக்கான ரூபாய்களைத் தொழிலில் முடக்குவார்கள். தொழிற்சாலை வாசலில் அறிவிப்புப் பலகையிலிருந்து எல்லாமே அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்வார்கள். தனியார் தொழிலைச் சிறு மூலதனத்தில் தொடங்கிப் பிறகு விஸ்தரித்துக் கொண்டு போவார்கள்."

இப்படிச் சொன்னவர் தமிழக முதல்வர் திரு அண்ணாதுரை. இதற்கேற்பத் திருமங்கலத்தில் சிறிய தனியார் தொழில் நிறுவனமாக முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் ஓடுகள் தயாரிப்புத் தொழிலைத் தொடங்கினார் திரு ஏ. கே. ரங்கநாதய்யர். பெரிய மூலதனத்துடன் அத்தனை இயந்திரங்களையும் அயல் நாடுகளிலிருந்து அவர் தருவித்து விடவில்லை. எந்தெந்த இயந்திரங்களைத் தம்மால் தயாரிக்க முடியுமோ அவற்றையெல்லாம் தாமே தயாரித்து நிறுவி ஒரே ஒரு ஹைட்ராலிக் இயந்திரத்தை மட்டும் அயல் நாட்டிலிருந்து வரவழைத்தார். "ஸ்ரீரங்கநாதன் அவர்களின் மூளை அபார மூளை. அது களிமண்ணினால் ஆனது அல்ல; களிமண்ணைக் கொண்டே செல்வம் ஈட்டுகிற மூளை!" என்று அவரது பெருமையை நகைச்சுவை ததும்ப நவின்றார் திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர்.

ஸ்ரீ கிருஷ்ணா ஓடு தயாரிப்புத் தொழிற்சாலையில் களிமண்ணை நன்கு பதப்படுத்திய பிறகு அச்சு இயந்திரத்தில் ஓடாக வார்த்தெடுக்கிறார்கள். ஒரு நாளைக்கு ஓர் அச்சுக்கு ஆறாயிரம் ஓடுகள் வார்த்தெடுக்கப்படுகின்றன. வார்த்தெடுக்கப்பட்ட ஓடுகள் மிகப் பிரும்மாண்டமான கூரையில் மரச் சட்டங்களில் ஆறு நாட்கள் காய வைக்கப்படுகின்றன. இது தவிர, உஷ்ணமும், காற்றின் நீர்த்தன்மை (Humidity)யும் ஒரே சீராக இருக்குமாறு கட்டுப்படுத்தப்பட்டுள்ள அறைகளில் காய வைக்கப்படுகின்றன. உஷ்ணம், காற்றின் நீர்த்தன்மை இவற்றைக் கட்டுப்படுத்தும் இயந்திரத்தைக் கண்டு பிடித்தது ஸ்ரீ ரங்கநாதன் அவர்களே. மிகப் பெரிய சூளையில் ஓடுகள் வேகவைக்கப் படுகின்றன. சூளைக்குள் நிலக்கரியை அளவாகச் செலுத்தும் கருவி திரு ரங்கநாதன் அவர்களின் தயாரிப்பாகும்! தயாரான ஓடுகள் வெளிவந்ததும் தரம் பிரித்து வைக்கப்படுகின்றன.

ஓட்டை, 'நாத நிபுணர்கள்' கம்பியால் தட்டி நாதமெழுப்புகிறார்கள். கணீர் என்ற ஒலி எழுந்தால் முதல் தரம்! இந்த முதல்தர ஓடுகளை மலேஷியாவுக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். ஒரு லட்சம் ஓடுகள் மலேஷியாவுக்குப் பறந்து அன்னியச் செலாவணி சம்பாதித்துத் தருகின்றன. இரண்டாவது, மூன்றாவது தரமான ஓடுகளும் உண்டு.

அண்மையில் சென்னை நகரில் தீக்கிரையான பல குடிசைகளில் வாழ்ந்தோருக்கு வேறு குடியிருப்பு அமைத்துத் தரும் திருப்பணிக்காக லட்சம் ஓடுகளை நன்கொடையாகத் தரக் கிருஷ்ணா ஓடுகள் தயாரிப்பு நிலையத்தினர் முன் வந்து, அந்த ஓடுகளை மந்திரிகள் முன்னிலையில் சமர்ப்பித்தார்கள். முதன் மந்திரி திரு அண்ணாதுரை, தொழில் மந்திரி திரு நெடுஞ்செழியன், பொதுப் பணி இலாகா மந்திரி திரு கருணாநிதி மூவரும் இவ்விழாவில் கலந்து கொண்டு சிறப்பித்தார்கள். தொழில் மேதை திரு ஏ. கே. ரங்கநாதன் அவர்களின் புதல்வர்களான திரு ஏ. ஆர். கிருஷ்ணமூர்த்தி திரு ஏ. ஆர். ராஜகோபாலன் ஆகியோரின் தாராள மனத்தைப் பாராட்டினார்கள். 'ஐந்நூறு ரூபாயில் ஒரு சிறு ஓட்டு வீடு கட்ட முடியும்' என்பதை இருபத்து நாலு மணி நேரத்தில் கட்டி முடித்துப் பார்வைக்கு வைத்திருந்தார்கள் கிருஷ்ணா டைல்ஸ் ஸ்தாபனத்தார்.

"ஒரே இயந்திர மயமாகியுள்ள தொழில்களை விட வேலை வாய்ப்பு மிகுந்த, மனித சக்தியைப் பயன்படுத்தும் தொழில்களே நம் நாட்டுக்குத் தேவை. கிருஷ்ணா ஓடுகள் தயாரிப்பு நிலையத்தில் நிறைய மக்கள் சக்தியைப் பயன்படுத்தி, அவர்களுக்கு வாழ்வளிப்பதைப் பாராட்டுகிறேன்!" என்றார் அண்ணா. -பி.எஸ்.எம்.



# பொன்னிவனத்துப் பூங்குயில்

அத்தியாயம் 30

## '' தங்கச் சிலை அருகே தாமரை பூத்தது போல் ''

கொத்தமங்கலம் சுப்பு

சிலர் கடைகால் போட்டுக் கொண்டே யிருப்பார்கள். கட்டிடம் கட்டவே மாட்டார்கள். சிலர் கடைகாலைப்பற்றிக் கவலைப்படாமல் 'நின்ற வரைக்கும் நெடுஞ் சுவர்' என்று கட்டிக் கொண்டே போவார்கள். உலகுக்கு இருவருமே வேண்டுபவர்கள்தான்! ராய கோபுரத்தை அண்ணாந்து பார்த்த பரங்கிக்காரன் அடித்தளத்தைக் கண்டே எவ்வளவு பெரிதாக இருக்கிறதென்று எண்ணித் திகைத்தான்.

''என்ன, பட்டிக்காட்டான் பலகாரக் கடையைப் பார்க்கிற மாதிரி பார்க்கறே?'' என்றான் முத்து. பரங்கிக்காரன் கோபுரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''மிஸ்டர் மொட்டு! இதன் 'ஹெய்ட்டு, ப்ரத்து, டெப்த் வாட்?'' எனறவுடன் முத்து ''ரைட், லெப்ட்'' என்று கால்களைத் தூக்கிப் போட்டுப் படை நடை பயின்றான். இதைப் பார்த்த பரங்கிக்காரன் சிரித்தான்.

''உசரம், நீலம், அவலம்'' என்றான்.

''என்யா! அற்புதத்தைப் போய் அவலம்கிறே?'' என்று கேட்டு விட்டு, ''உசரம் பதினறு முழம். இது விஜயநகரராயர் கட்டினார். கட்டி முடித்திருந்தால் இதுதான் தென்னிந்தியாவில் பெரிய கோபுரமாக விளங்கியிருக்கும். உங்கிட்ட வந்து இதெல்லாம் சொல்றேன் பாரு'' என்றான் முத்து.

பரங்கிக்காரன் படம் போட ஆரம்பித்து விட்டால் அவனுக்குக் காது கேட்காது. அவன் பரபரவென்று ராய கோபுரத்தைப் படம் வரைந்து கொண்டிருந்தான். அவனைப் பார்க்கவும், அவன் படத்தைப் பார்க்கவும் ஸ்ரீரங்கத்து மக்களும், யாத்திரீகர்களும் அவனைச் சுற்றிக் கொண்டார்கள்.

''ஒண்டர்ஃபுல், ஒண்டர்ஃபுல்'' என்றான் பரங்கி.

'' 'ஃபுல்' ஆயிருந்தா அப்ப தெரியும்! இதை எங்கள் விஜயரங்க சொக்கநாத நாயக மகாராஜா எடுத்துக் கட்டிப் பூர்த்தி செய்துவிட முயன்றார். இந்த வருஷம் அவர் இருந்தா கட்டியே இருப்பாரு. என்ன செய்யறது. ராய



கோபுரத்துக்குக் குடுத்து வைக்கல்லே'' என்றான் முத்து.

அப்போது 'டமார் டமார்' என்று இரண்டு வெடிகள் முழங்கவே, பரங்கிக்காரன் பயந்து சரேலென்று கீழே விழுந்து குப்புறப் படுத்துக் கொண்டான். முத்து கடகடவென்று சிரித்தான்.

''ஏன்யா! பயந்து நடுங்கிட்டயா? இது பீரங்கி இல்லே, அதிர்வேட்டு'' என்றான்.

பரங்கிக்காரன் உடல் பதற எழுந்து, ''வாட் முட்டு?'' என்றான். ''வேட், வேட்? வாட்?''

''என்யா என்னைப் போட்டு வாட்டறே! இங்கே டெய்லி பெஸ்டிவல். தினம் திருநாள்.''

''மிஸ்டர் முட்டு! விஜயநகர ராயர் ஊருக்கு ஊர் கோபுரம் கட்ட ஆரம்பித்திருக்கிறார். ஒரு ஊரிலாவது அது முடியவில்லை. ஆகையால் முடியாத காரியங்களை 'ராய கோபுரம்' என்றே உங்கள் நாட்டில் சொல்லுகிறார்கள். இதை ஏன் மொட்டையாக விட்டிருக்க வேண்டும்? இதன் மேல் சார்து பூசி, சுற்றிலும் கைப்பிடிச் சுவர்களை எழுப்பி இங்கே ஒரு பொம்மை, அங்கே ஒரு பொம்மையை வைத்து ஏன் ஒருவிதமாக முடித்து விடக் கூடாது? இந்த அஸ்திவாரத்திற்குத் தகுந்தாற் போல் ஒரு கோபுரத்தைக் கட்டி முடிப்பது என்றால் மனிதனால் முடியக்கூடிய காரியமா?''

என்று பிரஞ்சும் ஆங்கிலமும் கலந்து பிளந்து கட்டினான் பரங்கி.

''ஒரு கோபுரம் முடியாமல் இருப்பது அந்த நாட்டுக் குடிகளுக்கே அவமானம் என்று எங்களவன் நினைப்பான்'' என்று தமிழில் தண்ணீர் பட்டபாடாய்ப் பேசினான் முத்து.



ஸ்ரீரங்கன் திருஉண்ணாழியின் கிழக்குப் பிராகாரத்தில் மகாராணி மீனாட்சி அம்மகாருவின் தம்பியும், நாட்டின் புது அமைச்சருமாகிய சின்ன வெங்கடப் பெருமான் அருகில் ஒரு

# காஷ்மீர் பொக்கே டால்க் உபயோகித்து மணிக்கணக்காக சுகந்தத்துடனும், புதுமையுடனும் இருங்கள்




அன்றலர்ந்த மலர்களின் புதுமையுடனும் சுகந்தத்துடனும்கூடிய காஷ்மீர் பொக்கே டால்க் உங்களைச் சூழ்ந்து பரவி இருக்கட்டும்... உங்களைச் சுற்றி அதன் குளுமையான, பூவிதழ்போன்ற மென்மையான ஸ்பரிசத்தையும், வசீகரிக்கும் நறுமணத்தையும் உணர்ந்து அனுபவியுங்கள். பலமணிகளுக்குப் பிறகும், காஷ்மீர் பொக்கே டால்க்கின் குன்றாத நறுமணமும், புதுமையும், மலர்க்கொத்துகள் போன்று உங்களைச் சூழ்ந்து நிற்பதை உணர்வீர்கள்.



காஷ்மீர் பொக்கே ஒரு உன்னதமான அழகுசாதன டால்க் மட்டுமல்ல. குழந்தைக்கும் ஏற்ற அற்புத டால்க். அது இருவருமே உபயோகிக்கக்கூடிய சௌகரியமான ஒரு பவுடர்!






## காஷ்மீர் பொக்கே

ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ள டாலகம் பவுடர்

கால்கேட்டின் தரமான தயாரிப்பு

ஸ்தபதியார் நின்று கொண்டிருந்தார். கறுத்த மேனியும், கடைந்தெடுத்த சிற்பம் போன்ற உடலும், கழுத்தில் கண்டாபரணமும் இடையில் பஞ்சகச்சமும் அணிந்து மார்பில் முப்புரி நூல் இலங்க அவர் ஒரு முனிபுங்கவரைப்போல விளங்கினார். அவரது திருப்பெயர் பாலாப்பட்டி பரமனாச்சாரியார். தமிழகத்தின் வரலாற்றைச் சிறப்புமிகு சிற்பங்களாக வடிக்கும் பரம்பரையில் வந்தவரவர். கல் உளிகளைக் கவி பாடச் செய்தவர் அவர். திருமலை நாயக்கர் தம் செலவில் திருவரங்கத்தில் கட்டிய மண்டபத்திற்குப் 'பரமனாசாரி மண்டபம்' என்றே சிற்பியின் பெயரைச் சூட்டினார்.

தமிழகத்தின் இரு கலைக் கண்கள் திருச்சியும், மதுரையும். மதுரை மீனாட்சி அம்மன் கோயிலின் கிளி மண்டபம், கம்பத்தடி மண்டபம், கோயில் திருப்பணி முதலியவற்றைச் செய்ததோடு அல்லாமல், என்றைக்கும் புதுக் கருக்குக் குறையாத புது மண்டபம் என்னும் வசந்தோத்சவ மண்டபமும் கட்டியவர் திருமலை நாயக்கர். முத்தமிழைப் போல் மூன்று குளங்கள் தமிழ் நாட்டுக்கே அழகு கொடுப்பவை. அவை முறையே கமலாலயம், அரித்திரா நதி, வண்டியூர் தெப்பக்குளம் ஆகும். வண்டியூர்த் தெப்பக்குளத்தின் அழகை எழுதப் புகுந்தால் வண்டி வண்டியாக எழுத வேண்டி வரும். அம்மாதிரியான திருக்குளம் உலகிலேயே வேறு எங்கும் கிடையாது. இதைப் போலவே இன்னொரு திருமலை நாயக்கன் மகாலும் இல்லை. திருமலையும், தெப்பக்குளமும் உள்ளவரை அழியாப் புகழ் பெற்று ஆயிரம் பிறை கண்டவர் திருமலை நாயக்கர். அவர் செய்த திருப்பணிகளில் எல்லாம் பரமனாசாரியன் பாட்டன் பங்கு பெற்றவர். அதோடு திருவரங்கத்தில் உள்ள கருட மண்டபம், நரசிங்க மண்டபம் ஆகிய அரிய திருப்பணிகளைச் செய்த பரம்பரையில் வந்தவர். பரமன் ஆசாரி கையால் கண்டினால் கருங்கல் பேசும். பொறையில் தட்டினால் தேரை வெளியே வரும். மச்சம், ஒச்சம், மரு இல்லாத உறையூர் பாறைகளை அவர் கை கரும் பளிங்காக மாற்றும். அவர் கையால் கண் திறந்த சிற்பங்கள் கண்டவர்கள் கண்களைக் கவரும். அன்று அவர் தமக்கு அருகில் மரத்தால் செய்த ஒரு மாபெரும் கோபுரத்தின் மாதிரி வடிவம் ஒன்றை வைத்திருந்தார். ஸ்ரீ மகா விஷ்ணுவின் விசுவரூபத்தைப் போல பதினான்கு மாடங்கள் அக்கோபுரத்தில் அமைக்கப் பெற்றிருந்தன. மகாராணி மீனாட்சியின் உத்தரவைப் பெற்று அத்திருப்பணிக்குத் தச்ச முகூர்த்தம் செய்யவே அவர் அங்கு வந்து மகாராணிக்காகக் காத்திருந்தார். ஆனால் மகாராணி மீனாக்ஷியோ மேற்குத் திருஉள் நாழியில் அஷ்டாட்சரப் படிகளுக்கு எதிரே புதிதாக அமைக்கப்பட்டிருந்த தம் கணவர் விஜயரங்க சொக்கநாத நாயகரின் சுவர்ண பிம்பம் ஒன்றைப் பார்த்துக் கொண்டே கண் கலங்க நின்று கொண்டிருந்தார்.

சில மாதங்களுக்குமுன் அவரும், அவரது கணவர் விஜயரங்க சொக்கநாத நாயக்கரும் கைசிக ஏகாதசி அன்று இரவில் திடீரென்று திருவரங்கத்தம்மானைச் சேவிக்க வந்தார்கள். காவிரி வெள்ளத்தால் அவர்களுடைய கனக ஓடம் சிறிது தடைப்பட்டது. திருஉள் நாழிக்கு வந்தபோது அவர்கள் வருகையை யாரும் எதிர்பாராமையால் கோயிலார் அரங்கனின் ஆராதனை முடிந்து திருக்கதவங்களைப் பூட்டித் திருக்காப்பு இட்டுவிட்டு அஷ்டாட்சரப் படிகளில் இறங்கிக்கொண்டிருந்தார்கள். அரசரைக் கண்டவுடன் திகைத்தார்கள். அரசரும் திகைத்தார் — ஆயினும் உடையவர் ஏற்படுத்திய பூசை விதிகளின்படி இனி கதவு திறக்கக்கூடாது என்ற காரணத்தால் அரசரைப் பார்த்து, வணக்கத்தோடு 'ஓச் சேடிதி' என்றார் அர்ச்சகர். 'அடுத்த ஆண்டு பார்த்துக் கொள்ளலாம்' என்று அதற்குப் பொருள். 'பிழைத்துக் கிடந்தால்' என்றும் பொருள். அரசர் ஏங்கிய முகத்தோடு நின்றார். எம்பெருமானைக் காண இயலாதுபோனதில் அவர் கண்கள் கலங்கின.

அவர் பிழைத்துக் கிடக்கவில்லை. சிறிது நாளில் பரமபதத்துக்கு எழுந்தருளிவிட்டார். ஆனால் இந்தப் படிகளின் முன் அவர் நின்ற காட்சியை மற்றவர்கள் மறந்தாலும் மனைவி மறக்கவில்லை. அதே நிலையில் அவரைச் சொக்கத் தங்கத்தால் வார்க்கச் செய்தாள். ஏங்கிய முகத்தோடு அந்தப் படிகளுக்கு எதிரிலேயே அவரை என்றும் இருக்கும்படி வைக்கச் செய்தாள். அரசனாக இருந்தாலும் அரங்கனைத் தரிசிப்பதில் கால தாமதம் கூடாது. 'தண்டு காலாய் ஊன்றித் தள்ளி நடவா முன் கண்டுகொள்ள வேண்டும்' என்று எடுத்துக் கூறுவது போல அந்தத் திரு உருவம் அங்கு நின்றது. அவர் முகத்தைப் பார்த்துக் கமல நயனங்களில் கண்ணீர் மல்க நின்றாள் மீனாட்சி. கணவனுக்கு மூன்று குறைகள் இருந்தன. ஒன்று அரங்கனைத் தரிசிக்க முடியாமல் போனது. மற்றொன்று திருஉள் நாழியில் அவர் எழுதச் செய்த வைணவ வரலாறுகளில் சில சித்திரங்கள் முடியாமல் இருந்தது. மூன்றாவது ராய கோபுரத்தைத் திரும்

## நாகையில் நடந்தது!



— நாகை தனசேகரன்

திரு சி. சுப்பிரமணியம் பேசுவதைக் கேட்க அத்திடலில் மக்கள் ஆவலுடன் கூடி யிருந்தனர். அவர் பேசுவதற்கு முன் ஒருவர் எழுந்து, 'மைக்'கின் முன் போய் நின்று பேச ஆயத்தமானார். தலைமை வகித்தவரோ அடுத்து யார் பேசுவார் என்பதை அறிவிக்காமலே அமர்ந்திருந்தார்!

நின்று கொண்டிருந்த பேச்சாளர் பேச ஆரம்பித்தார். அதே நேரத்தில் மேடைக்குக் கீழ் அமர்ந்திருந்தவர்கள் ''....சொல்லுங்க... சொல்லுங்க...'' என்றார்கள். உடனே பேச்சாளர் ''என்னத்தைச் சொல்றது?'' என்றார்.

''இப்போ பேசப்போறது யாருன்னு 'மைக்'கிலே சொல்லுங்க!'' என்றார்கள்.

உடனே பேச்சாளர், ''இப்போ பேசப்போறது நான்தான்! என் பெயர் பூவராகன்!'' என்றார்.

---

பக் கட்டுவது. முன் இரண்டையும் முடித்து விட்டாள் மீனாட்சி. மூன்றாவதைத்தான் முப்பது லட்சம் வராகன் செலவில் பாமணாசாரியைக் கொண்டு முடிக்கத் திட்டமிட்டாள்.

மகாராணியாரின் குவளை மலர் போன்ற கண்கள் சிறிது கலங்கி இருந்தன. சோகத்தை வாய்விட்டுக் கூற முடியாததால் அவருடைய மார்பு பெருமூச்சால் விம்மிக் கொண்டே இருந்தது. தன் கணவரின் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். இரு விழிகளின் நோக்கில் இதயம் பேசியது.

''சுவாமி, தங்கள் முப்பாட்டனார் திருமலை நாயக்கர் தென் மதுரைக்கே பெருமை தேடித் தந்தார். தடாதகைப் பிராட்டியாரின் திருக் கல்யாண உத்ஸவத்தை மாசி மாதத்திலிருந்து சித்திரைத் திருவிழாவாக மாற்றினார். அழகு மலையானைத் தீர்த்தம் கொடுக்க மதுரைக்கு வரவழைத்தார். திருக் கல்யாண உற்சவத்தைச் சிறப்போடு நடத்த வழி செய்தவர் அவர் அல்லவா? 'என்றென்றும் மதுரைக்கு அரசி, மீனாட்சி அம்மன் தான். நான் அவருடைய தாசனாகவே இருந்து அரசை ஆளுவேன்' என்று உறுதி எடுத்துக் கொண்டு லட்சம் வராகன் செலவில் அன்னைக்கு வைரக் கிரீடமும் அவள் திருக் கரத்தில் விலை மதிக்கவொண்ணாத முழு வைரச் செங் கோலையும் செய்து அளித்தார். ஆண்டு தோறும் ஆறுகால் மண்டபத்தில் திருக் கல்யாணக் கோலம் கண்டு, செங் கோலைத் தன் கரத்தில் வாங்கி ஆனை சேனை பரிவாரங்களுடன் அதை ஊர்வலமாக அரண்மனைக்கு எடுத்துச் சென்று ஆஸ்தான மண்டபத்தில் அரியணையின் மீது செங்கோலை அமரச் செய்து அதைத் தொட்டு வணங்கும் துரை அல்லவா திருமலை அய்யன். அவர்கள் ஆட்சிபுரிந்த நாட்டை அணங்காகிய நான் எவ்வாறு ஆளுவேன்? தங்கள் பாட்டியார் மகாராணி மங்கம்மாநாச்சியார்! திறமை எங்கே? நான் எங்கே? தன் பிள்ளையாகிய உங்கள் தந்தை வைசூரியில் இறந்த கொடுமையையும் தாங்கிக் கொண்டு அவர்கள் மதுரை மக்களுக்காக உயிர்வாழ்ந்தார்கள். மூன்று மாதக் குழந்தையாக இருக்கும்பொழுதே முடி சூட்டிக்கொண்டவர்கள் தாங்கள். பேரனுக்குப் பிரதிநிதியாகப் பாட்டி ஆண்டதை பாரெங்கும் இல்லை.

மரங்களெல்லாம் சொல்லுகின்றன, மகாராணி மங்கம்மாவின் பெயரை. சாலையில் நிழலைக் கண்டால் இது மங்கம்மா சாலை என்கிறார்கள். சத்திரத்தைக் கண்டால் 'இது மங்கம்மா சத்திரம்' என்கிறார்கள். அவர்கள் மங்கையர்களுக்கே திலகமாக, பெண்ணரசு செய்து கன்னித் தமிழ் நாட்டுக்கே பெரும் பெயரை உண்டாக்கினார்கள். கன்னிக்குமரியும் பெண்தான். அன்னை மீனாட்சியும் பெண்தான். அடிமை மங்கம்மாளும் பெண்தான். பெண்ணரசு என்பது பேய் அரசு அல்ல. அது தாய் அரசு' என்று உலகத்துக்கே ஓர் எடுத்துக்காட்டாக ஆண்டு வந்தார்கள். ஆற்காட்டு நவாப் படை பலத்தால் மதுரையையே அழிக்க வந்தார். தன் நிலை தெரிந்து, மாற்றான் வலிமையை உணர்ந்து அவருக்குப் பொன்னும், பொருளும் பட்டும், பணியும் பரிசு கொடுத்து அவருடைய படைத் தலைவர்களுக்குக் கைக்கூலியும் கொடுத்துக் கன்னித் தமிழ் நாட்டுக் கலைகளைக் காப்பாற்றியவர்கள் அல்லவோ மங்கம்மா? அவர்கள் அருள்தான் எனக்கு அரணாக விளங்கவேண்டும்'' என்று மகாராணி எண்ணுகையில் அவர்கள் கண்ணீர் கணவரின் பொற்சிலையின் காலடியில் பொல பொல வென்று பனி மலர் தூவியதைப் போல் விழுந்தது; மகாராணி கண்களைத் துடைத்துக் கொண்டார். அரசி ஆகிவிட்டதால் வாய்விட்டு

## இந்த ப்ரிஸில் முனைகளை பூதக் கண்ணாடியின் கீழ் ஒப்பிட்டுப் பாருங்கள்



# பினகா

## டூத் பிரஷ்

'வட்டவடிவுள்ள நுனிகளை' உடையதால்
REG. PAT. NO.
ஈறுகளைக் கிழிக்காது

சுத்தமாக பல் துலக்குங்கள்
அபாயமின்றி பல் துலக்குங்கள்
பினகா கொண்டு பல் துலக்குங்கள்

CIBA

# தலைவலியா?

# அனாஸின்

## வலி நிவாரணத்திற்கு மேலானது ஏனெனில் 4 வழிகளில் வேலை செய்கிறது




டாக்டரின் மருந்துக் குறிப்பைப் போல், பல மருந்துகள் இணைந்த ஒப்பற்ற கலவையாகிய அனாஸின் மூலம் 4—வழி நிவாரணம் அதி விரைவில் கிட்டும்:

1. தலைவலியைத் தணிக்கிறது அனாஸின் —வேகமாக.
2. தலைவலிக்கு வழக்கமான காரணமாக அமையும் படபடப்பை ஆற்றுகிறது அனாஸின்.
3. தலைவலியோடு இயல்புடன் இணைந்துவரும் சோர்வை வெல்லுகிறது அனாஸின்.
4. வாட்டத்தைப் போக்கி அகமும் முகமும் பழையபடி மலரச் செய்கிறது அனாஸின்.

அனாஸின், சளி, ஃப்ளூ, பல்வலி, உடல்வலி ஆகியவற்றையும் தணிக்கிறது.

## அதி வேகமாக நிவாரணம் பெற 2 அனாஸின் சாப்பிடுங்கள்

Regd. User : Geoffrey Manners & Co., Ltd.

A-26

அலறவும் முடியாமல் அருமைக் கணவனின் திருமுகத்தையே பார்த்தார். அந்தத் தங்கச் சிலை அவள் கண்ணீரில் தளதளவென்று உருகுவதுபோல் தோன்றியது. என் தங்க விக்கிரகமே' தங்களைப் பிரிந்து வாழவா என்னைப் பட்டத்தரசி ஆக்கினீர்கள்? ஆண்டுதோறும் ஸ்ரீசைலம் முதல் ஆழ்வார் திருநகரி வரை திருப்பதிகளுக்கு யாத்திரை செல்வீர்களே, ஒவ்வொரு கோயிலுக்கும் தங்க வட்டில்களும், பைம்பொற்சடாரிகளும், பூஜாபாத்திரங்களும் வாங்கிக் கொடுப்பீர்களே, அது காணாமல் போய் விட்டது என்று அடுத்த ஆண்டில் சொல்லுவார்கள். அதற்காகக் கைங்கரியபரானைக் கள்வர் என்று தூஷிக்காமல் 'போனால் போகட்டும். வேறொன்று செய்து கொள்ளுங்கள்' என்று வேறொன்று செய்து கொடுப்பீர்களே! இப்பொழுது உங்களை யார் எனக்குக் கொடுப்பார்கள்? ''பாராளும் மன்னன் பாகவதன் ஆகிவிட்டான். அரசைக் கவனிப்பாரில்லை'' என்றெல்லாம் எத்தனையோ பேர்கள் தங்களைத் தூற்றினார்கள். அதற்குத் தாங்கள் செவி சாய்த்ததில்லையே! அருளின் வடிவே! அன்பின் உருவமே! என் ஆருயிரே!'' என்று குமுறினார் மீனாட்சிதேவியார்.

'ஆணி முத்துக்களைத் தரம் பிரித்து அடி முதல் நுனி வரையில் கரவு பார்த்து ஆயிரம் முத்து வடங்களால் அழகுமலையானுக்கு முத்துத் திரை தொங்க விட்டீர்களே! அந்தத் திரை இருக்கிறது. என் துரை எங்கே?'

அழகன் பள்ளி அறைக்குச் செல்ல ஆனைத் தந்தத்தில் பல்லக்குச் செய்து அளித்தீர்களே! அந்தப் பல்லக்கு இருக்கிறது. என் அழகன் எங்கே? இந்தத் திருவரங்கத்தைத் திருமலை அய்யன் அரங்கனுக்கு நவரத்தின அங்கி செய்து அணிவித்தார். ராணி மங்கம்மாவும் நவரத்தின அங்கிதான் செய்வித்தார். ஆனால் தாங்களோ ஆணிமுத்தைச் சேர்த்து அழகும் உறுதியும் பார்த்து ஆகாய நீலமும் அலைகடல் நீலமும் மாயோனின் நீலமும், மணிமுத்தில் ஒளிவீசக் கைபடாமல், சிப்பி கருவூலத்தில் உருவாகிய முத்துக்களால் அரங்கனுக்கு அங்கி செய்தீர்களே! மூன்று லட்சம் வராகனில் முத்தங்கி செய்படி தாங்கும் நாகத்தைத் தோடு பாயாய் விரித்த பரம்பொருளின் முடி தாங்க முத்துக் கொண்டையும் செய்தீர்களே, அதைப் பாருள்ளவரை மக்கள் பார்ப்பார்களே. ஆனால் என் முத்து எங்கே? என் கண்ணீரை முத்து முத்தாக உதிர்க்க வைத்து விட்டீர்களே. உங்கள் உத்தரவு என்னை அரசியாக்கியது. அதனால் உடன் வருவதைத் தடுத்தீர்கள். நான் அரசியானவுடன் அதுவரை உங்களுக்கு அஞ்சிக் கிடந்த என் அண்ணனும் தம்பியும், அவர்களே அமைச்சராகி விட்டார்கள். தங்கை அக்காள் என்று தாங்குகிறார்கள். தங்கத்துக்கும் தரைக்கும் ஏங்குகிறார்கள். நமது வளர்ப்புப் புதல்வி நீலமயிலை, நெருங்குகிறான் என் தம்பி. அவளை அடைந்தால் தனக்கு அரியணை கிடைத்துவிடும் என்று எண்ணுகிறான். எதிரிகள் 'பெண்பிள்ளை துரைத்தனம்' என்று பேசுகிறார்கள்.

காவேரியில் ஒருகாலும், வைகையில் ஒரு காலுமாக நான் தவிக்கிறேன். ஆசையும் அனந்தர பங்காளிச் சூழ்ச்சியும், பட்டத்து வாரிசுகளையெல்லாம் ஆட்டி வைக்கிறது. எந்த நிமிஷத்தில் எவன் என்ன செய்வானோ.....?ஐயனே! உங்கள் அடிகள்தாம் எனக்குத் துணை. ரங்கன்தான் எனக்குத் துணை என்று பட்டு முந்தானையால் தன் பவள வாயை இறுகப் பொத்திக் கொண்டு குலுங்கக் குலுங்கக் கதறினாள் அக்கோமளவல்லி. தன் கணவனின் தங்கச் சிலையின் திருவடிகளைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அதைத் தொட்ட மாத்திரத்தில் எங்கிருந்தோ வீரம் பெண் உடலைப் பருகியது. வெற்றி வீரர்களைப் பெற்றெடுக்கும் குலமல்லவா? நிமிர்ந்தாள் வீராங்கனை. ''நான் பெண்ணல்ல. அரசரின் பெண்சாதி. நான் மங்கை அல்ல. மங்கம்மாளின் பேரன் மனைவி. நான் தேவி அல்ல. திருமலை நாயக்கரின் வழித்தோன்றல். நான் பேதையல்ல. பெண்ணரசி. எவர் பகையும் எதிர்ப்பேன். மன்னர் பரம்



## 120வது ஸ்தானம்!

உல்லாசப் பிரயாணிகளிடமிருந்து பணம் சம்பாதிக்கும் நாடுகளில் இந்தியா 119வது ஸ்தானத்தில் இருக்கிறது. கடைசி இடத்தில் இருப்பது வியட்நாம். அங்கு சண்டை மட்டும் நடக்காமல் இருந்தால் அந்த 120வது ஸ்தானத்தை இந்தியா பிடித்துக் கொண்டிருக்கும்!

—டைம்ஸ் ஆப் இந்தியாவில் ஒரு கருத்து

—'பாபி'

பரையின் மானத்தையும், என் மானத்தையும்காப்பேன்: இது உறுதி'' என்று அந்தப் பெண் மனம், ஏன், பொன் மனம் புகன்றது. ஏற்கனவே எழிலுடைய அவர் முகம் ஏற்றி வைத்த விளக்குப் போல் மேலும் ஒளி வீசியது.

முப்பத்தைந்துக்கு மேல்தான் முழு அழகும் தெரியும்' என்று பெண்மணிகள் எழிலைப் பற்றிக் கூறுவார்கள். நரிக நிலம் அழகுதான் என்றாலும் தோட்டத்தைவிட அது அழகல்லவே. ராணி மீனாட்சிதேவியார் முப்பத்தைந்து வயது முழு அழகியாகவே விளங்கினார். அவர் அணிந்திருந்த காவிரி சலவை செய்த கவினுறும் பட்டு அந்த எழிலை மேலும் எடுத்துக் காட்டியது. அவர் சற்று எடுப்பான தோற்றம் உடையவர். வயது முப்பத்தி ஆறு ஆகி இருந்தாலும் நல்ல போஷாக்கினால் அந்த வயது தெரியவில்லை. மேனி திருமங்கலம் ரோஜா இதழின் நிறத்தில் இருந்தது.

தனது கருங்குழலை வாராது சற்று உயரத்தில் கொண்டையாக அவர்கள் எடுத்துக் கட்டியிருந்தார்கள். அது அவர்கள் அழகுக்கு இறைவனே இயற்கையாக வைத்த மகுடம்போல் இருந்தது. முழுமதியின் ஒளியை எடுத்துக் காட்டும் கருமேகம்போல் அமைந்த அந்தக் கொண்டையில் அழகுக்காகக் கிரீடம் அணியாமல் அரசி என்று அறிவுறுத்துவதற்காக இரண்டொரு வைரச் சரங்களை மட்டும் மாட்டியிருந்தார்கள். அவற்றில் உள்ள வைரங்கள் மேகத்தின் நடுவே ஒளிவீசும் தாரகை போல் வர்ண ஜாலங்களை அள்ளி வீசின.

வட்ட முகம் ஆதலால் பொட்டிட்டால் அழகு தெரிந்தது. நெற்றியில் அடிப்புறத்தில் பிறை போன்ற பச்சைக் கற்பூரத் திருமண்ணும் அதன் மேல் எம்பெருமான் கண்டருளிய குங்குமப்பூ ஸ்ரீசூர்ணமும் தரித்திருந்தார். அரண்மனை ஆராதனையின் பிரசாதமாகிய கஸ்தூரி திலகம் அதன்மேல் கமகமவென்று அமர்ந்து மணம் வீசியது.

அவர்கள் அணிந்திருந்தது முத்து மூக்குத்திதான். அது குமரிக்கடல் முத்து ஆகையால் அவர்களைக் குமரியாகவே காட்டியது. அவர்களின் காதுகளிலும் முத்துத் தோடுகளையே அணிந்திருந்தார்கள். முல்லைப் பல்லும் முத்து நகையும் கூடினால் அழகுதானே ?

முத்துக் குளிக்கும் தென் கடல் காவலர்கள் ஆகிய சேதுபதிகள், இருக்கையில் பாண்டி நாட்டரசிக்கு முத்துக்கள் பஞ்சம் ?

மகாராணி அவர்கள் அங்கு இருந்ததில் அந்த இடமே அழகாக இருந்தது. அப்போது ''அம்மாரு'' என்று ஓர் இளநங்கையின் குரல் மேலிருந்து கேட்கவே மீனாட்சிதேவி ''ராசெல்வி'' என்று செல்லமாக அழைத்தார்கள். ஸ்ரீரங்க விமானத்தில் புதிதாக வேயப்பட்ட பொற்தகடுகளில் உள்ள யாழிகளையும், கட்டம் கட்டமாக எழுதப்பட்ட சித்திர வேலைப்பாடுகளையும் பார்த்து விட்டு இறைவனின் மோகனவை தாரமே வான வீதியிலிருந்து இறங்கி வருவது போல் ஒரு வனிதாமணி, ஏணியின் வெள்ளிக் கைப்பிடி மேல் வழுக்கிக் கொண்டே, சரசரவென்று வந்து குதித்தாள். அவள் வந்ததும் மகாராணி அழகையே என்னவென்று கேட்கும் ஓர் அழகினை அங்கு கண்டோம்.

மாலையில் கடலின் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கிறோம். அதற்கு மேல் அழகு இல்லை என்று தோன்றுகிறது. அப்போது கடலில் ஒரு செந்நிறம் வரவே ஆகாயத்தைப் பார்க்கிறோம். செவ்வானம்தான் சிறந்த அழகு என்று தோன்றுகிறது. ஆனால் கடல் நீரில் ஓர் ஒளிப் பாதையைப் போட்டுக் கொண்டு முழுமதி உதயமானவுடன் கடல் செவ்வானம் — துடைத்து விடுகிறது. பக்கத்திலிருந்து மல்லிகை மணம் வருகிறது. திரும்பினால் அருமைக் காதலி மலர் சூடி நிற்கிறாள். கடல் செவ்வானம், வளமதி, மல்லிகையெல்லாம் அவள் முகத்தின் முன் மறைந்து விடுகின்றன என்று வாலிபர்கள் சொல்லுகிறார்கள். இதைத் தான் செய்தாள் அப்பெண். அவளுக்குப் பெயர், ''நீல மயில்'' என்று மீனாட்சிவைத்திருந்தார். அது உண்மை. ஆடி வரும் மயிலைக் கண்டால் யார் தான் நின்று பார்க்க மாட்டார்கள். அது பருவத்தின் அழகுமட்டுமல்ல. பரமனின் கைவண்ணமும் சேர்ந்திருந்தது.

''அம்மா, செல்வோமா?'' என்றாள் மயில்.

''உனக்காகத்தான் காத்திருந்தேன்'' என்று கூறிய போது அன்னையின் முகம் சிவந்திருப்பதைக் கண்ட நீலமயில், ''அம்மா! நீ என்னை விமானத்தைப் பார்க்கச் சொல்லி அனுப்பிவிட்டு இங்கு அழுது கொண்டு இருந்தாயா? நீ அழுதால் நாயகனின் தங்கச் சிலையும் கண்ணீர் உகுக்கும்'' என்று அந்த மங்கை நல்லாள் கேட்டதுமே மகாராணிக்கும் அழுகை பொத்துக் கொண்டு வந்தது. கஷ்டப்பட்டு அதை அடக்கிக் கொண்டு, ''செல்வி! நீ அழலாமா ? நீ என் தாமரை மலரல்லவா?'' என்று அவளை மார்புறத் தழுவிக் கொண்டாள். அப்போது, ''அடி, உதை, கொல்லு'' என்று ஒரு கூக்குரல் கருட மண்டபத்தில் எழுந்தது. (தொடரும்)

# வலியின் கொடும் பிடியிலிருந்து விடுதலை பெறுங்கள்

**தசை வலி**
**சுளுக்கு**
**மூட்டுக்களில் பிடிப்பு**
**வீக்கம்**

இவற்றிற்கு
மெதில்ஸாலிஸிலேட் சேர்ந்த

# அயொடெக்ஸ்*

**சாலச் சிறந்தது**

அயொடெக்ஸ் சருமத்துக்குள் ஊடுருவிச் சென்று தசைகள் மீதும் நரம்புகள் மீதும் வேலை செய்து வலியை விரைவில் வெளியேற்றுகிறது.

மூட்டுக்களில் பிடிப்பு, வீக்கம், இவற்றினுல் நீங்கள் அவதிப்பட வேண்டியதில்லை. அயொடெக்ஸை அழுத்தித் தடவுங்கள். வீக்கத்தையும் வலியையும் போக்க அயொடெக்ஸில் பிரத்தியேக கலவைகள் இருப்பதால் வலி விரைவில், நிச்சயமாக நீங்குகிறது. வலியைப் போக்குவதுடன் இதத்தையும் அளிக்க வல்லது அயொடெக்ஸ் !

வெட்டுக் காயங்களுக்கும், புண்களுக்கும் அயொடெக்ஸ் ப்ளெயின் உபயோகியுங்கள். அயொடெக்ஸ் கறை ஏற்படுத்துவதில்லை.

வலிக்கு நீங்கள்
நினைவில் வைக்க வேண்டிய பெயர்—
அயொடெக்ஸ்




SKF-6922(x)



ஸ்மித் க்லைன் அண்ட் ஃப்ரெஞ்ச் தயாரிப்பு

* ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்



## நினைவிருக்கிறதா?

"சென்னை நகரில் ஆங்கிலம் பேசும் சந்நியாசி வந்திருக்கிறார். தேஜஸுடன் விளங்கும் அவர் முகத்தை நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம். கடல்மடை திறந்தாற் போன்ற அவருடைய பேச்சை இன்றெல்லாம் கேட்டுக் கொண்டே இருக்கலாம்." இதுவே சென்னை நகரில் எங்கும் பேச்சு.



# சென்னையில் ஆங்கிலம் பேசும் சந்நியாசி

'நந்தலால்'

சென்னையில் வசித்த வங்காளிப் பிரமுகர் திரு பட்டாசார்ஜி (அப்போது அக்கௌண்டெண்ட் ஜெனரல்) வீட்டில் சுவாமிகள் தங்கியிருந்தார். ரங்காசாரியார், அழகிய சிங்கர், பாலாஜிராவ், 'விவேகசிந்தாமணி' ஆசிரியர் சி.வி. சுவாமிநாதய்யர் ஆகியவர்கள் சுவாமிகளுடன் நெருங்கிப் பழகி வந்தனர்.

அன்று சுவாமிகள் திருவல்லிக்கேணி கடற்கரையில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் பேசினார். நீதிபதி சர் எஸ். சுப்பிரமணிய அய்யர் இந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். அமெரிக்காவில் நடைபெறவிருக்கும் சர்வமத மன்றக் கூட்டத்துக்கு இவரை அனுப்புவது என்று சென்னைப் பிரமுகர்கள் இந்தக் கூட்டத்தில் முடிவு செய்தனர். இதற்காக நிதியும் திரட்டப்பட்டது. சுவாமி விவேகானந்தர் 1893ம் வருடம் மே மாதம் 31ந் தேதி "பெனின்சுலார்" என்ற கப்பலில் அமெரிக்காவுக்குப் பயணமானார்.

சிகாகோவில் ஹிந்துமதப் பெருமையை உலகறியச் செய்துவிட்டுத் தாய்நாட்டுக்கு 1896ம் ஆண்டு டிசம்பர் 16ந் தேதி புறப்பட்டார்: கண்டி, யாழ்ப்பாணம் முதலிய இலங்கை நகரங்களின் வழியாகப் பாம்பன் வந்ததும் அவருக்கு ராமநாதபுரம் ராஜா மகத்தான வரவேற்பு அளித்தார்.

சென்னை எழும்பூர் ரயில் நிலையத்தில் அவரை வரவேற்கத் திரளாக மக்கள் கூடியிருந்தனர். முன்பு சென்னைக்கு வந்தபோது இருந்ததைவிட இப்போது வரவேற்பு அதிக உற்சாகத்துடன் இருந்தது. இப்போது அவர் உலகெல்லாம் புகழ்பெற்ற மாமேதை அல்லவா? எழும்பூரிலிருந்து திருவல்லிக்கேணி வரை பதினேழு அலங்காரப் பந்தல்கள்!

ரயில் நிலையத்திலிருந்து எட்டுக் குதிரைகள் பூட்டிய சாரட் வண்டியில் சுவாமிகள் பவனியாக அழைத்து வரப்பட்டார். ஐஸ்ஹவுஸ் கட்டடத்துக்கு எதிரில் பெரிய மேடை போடப்பட்டு, அதில் சுவாமிகளை அமரச் செய்து இருபத்துநான்கு மொழிகளில் அவருக்கு வரவேற்புப் பத்திரங்கள் வாசித்தளிக்கப்பட்டன. இந்த 'ஐஸ்ஹவுஸ்' கட்டடத்தில் சுவாமிகள் பிரபல வக்கீல் பிலிகிரி அய்யங்காரின் விருந்தினராக ஒன்பது நாட்கள் தங்கி இருந்தார். இந்த ஒன்பது நாட்களும் நவராத்திரி போல் விளங்கியது.



# ஊட்டி வரை தொல்லை!



சிரிப்பு.... கும்மாளம்.... கூச்சல்:

கல்லூரி மாணவிகளின் கும்பல் ஒன்று நீலகிரி எக்ஸ்பிரஸிலிருந்து இறங்கி மலை ஏறும் ரயிலில் நுழைந்ததும், அங்கு ஏற்கனவே அமர்ந்திருந்த புது மண ஜோடியொன்று திருதிருவென்று விழிக்கலாயிற்று.

'தனியாக வந்தவர்களின் தனிமைக்கு இப்படியொரு முட்டுக்கட்டையா?' என்று நினைத்தார்கள்போல் இருக்கிறது. ஜன்னல் பக்கமாக இருந்த அவன் ஜன்னலோடு ஒட்டி அமர, அவன் அவளை நெருக்கிக் கொண்டு அமர்ந்தாள்.

அவனது முன்னுச்சி மயிர் முகத்தில் விழுந்து கண்ணை மறைத்துக் கொண்டிருந்தது. அதை அவன் நொடிக்கொருதரம் தலையை உசுப்பிப் பின்னுக்குத் தள்ளிக் கொண்டு இருந்தானென்றால் அவள் தனது காதோரம் சுருண்ட கூந்தலை அடிக்கடி எடுத்துப் பின்னங்காதில் செருகிக் கொண்டிருந்தாள்.

''நாகக்குத் தெரியாதவர்கள்'' என்று முணு முணுத்தவாறு கால் மேல் கால் போட்டுக் கொண்டார், மறுமுனையில் அமர்ந்திருந்த அந்தப் பெரியவர்: அவரது சில்க் ஜிப்பாவும் கையிலிருந்த வெள்ளி வெற்றிலைப் பெட்டியும் அவரைப் பெரிய மனிதராக்கிக் காட்டின. ''வரிசை வரிசையாக எத்தனை இடம் காலியாக இருக்கின்றன. புது மணத் தம்பதிகள் இருக்கும் இந்த வரிசைதான் கிடைத்தது இவைகளுக்கு?'' என்று எண்ணிக் கொண்டார்:

ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன அந்த வால்கள். ஒன்று கீழே இறங்கிச் சக்கரங்களை ஆராய்ந்து கொண்டிருந்தது. ''ஏண்டி ஏய்! பல் சக்கரம் இருக்கும் என்றாயே, இப்ப பல்லையும் காணோம் சக்கரத்தையும் காணோமே ?!'' என்று கேட்டாள் ஒருத்தி.

''எல்லாம் வரும்'' என்று மற்றொருத்தி பதில் சொல்ல, ''எப்ப?'' என்ற கோரஸ் கிளம்பியது. ''ஸ்லோ! மூச்!'' என்ற அந்தப் பெண் சொன்னாள். ''கல்லாறு என்று ஒரு சின்ன ஸ்டேஷன் வரும். அப்ப பல் சக்கரம் தானாக இறங்கி விடும்.''

''ஏய்....ய்.... ஷீலா! ஏறிக் கொள். வண்டி கிளம்பப் போகிறது'' என்று ஒருத்தி எச்சரித்தாள். அவசரம் அவசரமாகக் கதவைத் திறந்த அந்த ஷீலா விழித்தாள். கதவு தொளதொளத்ததே தவிர திறக்க வரவில்லை.

''ஐயோ! கார்டு வேறு விசிலை ஊதிவிட்டாரே! கதவு திறக்க வரவில்லையே!'' என்று பதறிப் போய்க் கீழே இருந்தவள் கத்தினாள். மற்றவர்கள் மேலிருந்து அலறித் துடிக்க எங்கும் ஒரே அமளி ஏற்பட்டது.

சட்டென்று எழுந்த அந்த வாலிபன் 'நகருங்க' என்று மற்றவர்களை விலக்கியவாறு வெளிப் பக்கம் குனிந்து கீழேயிருந்த கொக்கியை விலக்கிக் கதவைத் திறந்ததோடல்லாமல் கீழே இருந்தவளையும் கைலாகு கொடுத்து மேலே இழுத்து விட்டான்.

''நன்றி, மிஸ்டர்!'' என்று கோரஸில் வந்த நன்றியைப் புன்சிரிப்புடன் ஏற்றுக் கொண்டு, தன் புது மனைவியை நெருங்கி அமர்ந்தான் அவன்.

[முன் குறிப்பு: எச்சரிக்கையுடன் படிக்கவும். இந்தக் கதையை எழுதிய மாதம் ஏப்ரல்.]

கிழவனார் அந்தப் புதுப் பெண்ணைப் பார்த்தார். அவள் முகத்தில் சலனமில்லை. கணவனை உறுத்துப் பார்த்தவாறு தலையைக் குனிந்து கொள்வதைக் கவனித்தார். ''கண்ட்ரி ப்ரூட்ஸ்'' என்று அந்த மாணவிகளுக்குப் பட்டம் சூட்டியவாறு தலையை வெளிப் பக்கமாகத் திருப்பிக் கொண்டு காதை மட்டும் அந்தத் தம்பதிகளின் பக்கம் மேய விட்டார்.

அந்தனை கண்களும் தங்களையே கவனிப்பது கண்டு அந்தப் புது தம்பதிகள் சங்கடத்துடன் தள்ளி அமர்ந்து நெளிந்தார்கள்.

''ஏய், லீலா! உனக்கு அடுத்த மாசம் கல்யாணமில்லையா? இப்பவே பார்த்துக் கொள். இந்த மாதிரி அசிங்கமாகத் தள்ளி விலகிப் போய் உட்காரக் கூடாது. தெரியுமா?'' என்று ஒருத்தி சொன்னதும், அவளுக்கும், அவளுக்குமிடையே இருந்த இடைவெளி சட்டென்று குறைந்தது.

''புதுசா கல்யாணமான ஜோடியா?'' என்று அனிலா கேட்கவும் அவன் சிரிப்புடன் தலையைக் குனிந்து கொண்டான்.

''ஏய் டி, அனிலா! நாகக்குத் தெரியாதவள் டி நீ!'' மூக்குக் கண்ணாடிக்காரி ஒருத்தி சொன்னாள்: ''நீ ஒரு மாதிரி. கைப் புண்ணுக்குக்கூட உனக்கு மூக்குக் கண்ணாடி தேவை!''

அர்த்தமில்லாத இளிப்புகள் எழுந்தன. கிழவனார் நெளிந்தார் கோபத்துடன்.

''ஸார், உங்களைத்தான்! எந்த ஹோட்டலில் ரிசர்வ் பண்ணியிருக்கீங்க?'' என்று வினவினாள் ஒருத்தி.

''இன்னும் இல்லே. போய்த்தான் தேடணும்....!''

''தேடணுமா?'' என்று அதிர்ச்சியுடன் கோரஸ் கிளம்பியது. ''இது ஸீஸனாச்சே! தங்க இடம் கிடைக்கிறது ரொம்பக் கஷ்டம்'' என்றவர்கள் கும்பல்கூடி விவாதித்தார்கள். பிறகு ஒரு தீர்மானத்துக்கு வந்தார்கள். திருதிருவென்று விழித்துக் கொண்டிருந்த தம்பதிகளிடம் சொன்னார்கள். ''தாசப் பிரகாஷில் எங்களுக்காக நான்கு இரட்டை அறைகள் ரிசர்வ் பண்ணியிருக்கிறோம். உங்களுக்கு ஆட்சேபணையில்லாவிட்டால் எங்களோடு தங்கலாம். ஓர் அறை தர்றோம்!''

அவன் குனிந்து புது மனைவியிடம் எதையோ கேட்க அவள், ''உங்க இஷ்டம்'' என்று சொல்வது மட்டும் கிழவனாரின் காதில் விழுந்தது.

'பாவிப் பெண்களே! இங்கேயிருந்து தொல்லை தந்தது போதாதென்று ஊரிலுமா தொடரப் போகிறீர்கள்?' என்று தம்முள் எரிச்சல் பட்டுக் கொண்டார்.

''சரி!'' என்று அவன் சொல்ல, 'உய்' என்ற கூச்சலுடன் அறிமுகம் தொடர்ந்தது. ''நான் லீலா, அவ மாலா. வீலா, ராதா, கீதா, சீதா! இவள் மைதிலி. இவள் அனிலா எங்க குழுத் தலைவி. நாங்க எதிராஜ் கல்லூரி மாணவிகள். ஸீஸனுக்காக ஊட்டிக்குப் போகிறோம். உங்க பெயர்?''

''ஸ்ரீராம்!'' அவன் சொன்னான், சிரிப்புடன். ''மிஸ்டர் அண்டு மிஸஸ் ஸ்ரீராம்!'' என்று அறிமுகப்படுத்திக் கொண்டான்.

''ஐயோ! அவங்க பெயரைச் சொல்லுங்களேன்!'' என்று கூச்சல் கிளம்பவே,

''அதுவா?'' அவன் சிரிக்கும்போது கீழ் வரிசைப் பற்கள் பளிச்சிட்டன. ''ராஜஸ்ரீ!''

''அடேடே! சினிமாப் புகழ் பேராச்சே! எந்த ராஜஸ்ரீ? தமிழ் நாட்டு 'ஸ்ரீ'யா? சாந்தாராம் புதல்வியா?''

எங்கும் கேலியும் சிரிப்பும் கூச்சலும் அமர்க்களப்பட்டன. 'சே' என்று கொஞ்சம் முணுமுணுப்பாகவே சொல்லிக் கொண்டார் பெரியவர்.

''ஸார்! உங்க ரெண்டு பேரையும் ஜோடியாப் பார்த்தால் கண் நெறஞ்சு போறது!'' என்றாள் ஒருத்தி நாற்றுப் பாட்டியைப் போல.

''ஏய்டி, சனியனே! அப்படிச் சொல்லாதே! திருஷ்டி விழும்!'' என்று மாலா கண்டித்தாள். ''சரிதான் கம்மாயிருடி!'' என்று மறுத்தாள் ராதா. ''அப்படியே விழுந்தாலும், ஹோட்டலிலே வெந்நீருக்கு அடுப்புப் போட்டிருப்பான்கள். சமையலறையி



ராஜேந்திர்குமார்

லிருந்து மிளகாயும், உப்பும் வாங்கி நானே அவர்களுக்குத் திருஷ்டி கழிக்கிறேன்.''

அட்டார்லி ஸ்டேஷனில் நின்றிருந்த வண்டி கிளம்பியது. ஸ்டேஷனில் இறங்கிச் சற்றுத் தள்ளி நின்று சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த அவன் ஓடி வர, ''ஸார்.... ஸார்..... ஓடி வாங்க ஸார் !'' என்று எல்லோருமாகக் கதறினார்கள்.

''கட்டின பெண்டாட்டிக்குக்கூட இவ்வளவு அக்கறை இருக்காது போலிருக்கிறது. இதுகளுக்கென்ன வந்ததாம் ?'' என்று முணுமுணுப்புடன் அந்தப் பெண்ணைப் பார்த்தார். கலவரமா ? கோபமா ? அவள் முகத்தில் தெரிவது என்னவென்று அவருக்குப் புரியவேயில்லை.

ஓடி வந்தவன் பாய்ந்து ஏறிக் கொண்டான் சிரித்தவாறு.

''பயந்தே போயிட்டோம், ஸார் !'' என்றவர்கள் கண்டிப்புடன் சொன்னார்கள். ''புகை பிடிப்பதற்காக நீங்கள் அடிக்கடி கீழே இறங்கிப் போகத் தேவையில்லை. இங்கேயே புகையுங்க. எங்களுக்கொன்றும் ஆட்சேபணையில்லை '' என்றது.

'' மிக்க நன்றி !'' என்றான் புகையை வெளியே விட்டவாறு.

கடுகடுவென்ற முகத்துடன் அந்தப் புதுப் பெண்ணை நிமிர்ந்து பார்த்த பெரியவருக்குப் பகீரென்றது. கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டிருந்தது அது. ''அடிப் பாவிகளா ?'' என்று வயிறு எரிந்தவர், ''என்ன குழந்தே ! கண்ணில் கரித் தூள் விழுந்து விட்டதா ?'' என்றார் அழுத்தத்துடன், மற்றவர்களும் அவள் கண்ணீரைக் கவனிக்கட்டுமே என்று. ஆனால்..... அடுத்த விநாடியே ஏன் அப்படிச் சொன்னோமென்று ஆகிவிட்டது அவருக்கு.

''கரித் தூளா?'' பதறினார்கள் பெண்கள்: ''ஸார், ஸார் ! ஊதுங்க ஸார் !''

அவன் நெளிந்தான் சங்கடத்துடன். ''உங்களில் யாராவது....!'' என்று அவன் முடிக்கு முன்னால் பாய்ந்தார்கள். ''ஹூம்! நாங்கள் ஊதினால் அவங்களுக்கு ரசிக்காது. நீங்கதான் ஊதணும்.''

விடாப் பிடியாக அவனையே ஊத வைத்து விட்டார்கள். அந்தப் பெண் நெளிந்தாள்; சிணுங்கினாள். பெரியவர் தம்மையே நொந்து கொண்டார். அவர்களுக்குக் கும்மாளமாயிருந்தது.

பெண்களிடையே சிரிப்பு, அர்த்தமேயில்லாத இளிப்பு எழுந்தன.

''ஏய், ஷீலா ! பார்த்துக் கொள். நாளைக்குக் கல்யாணமாகி உன்னவரோடு வரும் போது மேட்டுப்பாளையத்திலிருந்து ஊட்டி போவதற்குள் பத்து தரமாவது கண்ணில் கரித்தூள் விழணும். அப்பத்தான் அவர் ஊதுவார்!''

''அவர் ஊதறதா? வேணும்டியம்மா !'' கன்னத்தில் கை வைத்துப் போலியாகப் பயந்தாள் அனிலா. ''பெண் பார்க்க வந்த அன்றைக்கே அவரைப் பார்த்தேன் ஏற்கனவே கொஞ்சம் சதைப் பிடிப்பு; மேலும் ஊதினால் தாங்காதுடியம்மா.''

ஷீலா உள்படச் சிரிக்க, இந்த முறை அவனும் சேர்ந்துகொண்டான். ஆனால் அந்தப் பெண் ? வாயைப் பொத்தி, தலையைத் தாழ்த்திக் கொண்டிருந்தது. சிரிக்கிறாளா? அழுகிறாளா ?

குன்னூருக்கு முன்னால் பாறைகளில், ''ஓடும் ரயிலில் பாடுங்கள், களைப்பே தெரியாது'' என்ற வாசகங்களைப் படித்ததும், ''மாப்பிள்ளை வந்தார் ! மாப்பிள்ளை வந்தார் மாட்டு வண்டியிலே '' என்ற கோரஸ் கிளம்பியது. கட்டைக் குரல் முதல், இனிமைக் குரல் உள்பட, கீச்சுக் குரல் வரை எழும்ப, அவன் சிரித்தான். கீழ் வரிசைப் பற்கள் பளிச்சிடச் சிரித்தான். அவளோ ? ஜன்னல் பக்கமாகத் தன் தலையைத் திருப்பிக் கொண்டு விட்டாள்.

நல்ல வேளையாக அந்தப் பெரியவருக்கு நெற்றிக் கண்ணில்லை. இருந்திருந்தால் அத்தனை பேரும் எரிந்து, பொசுங்கிப் போயிருப்பார்கள்.

வெல்லிங்டனை வண்டி அடைந்தபோது அவர்களுக்குச் சமமாக அவனும் சகஜமாக அரட்டையடித்துக் கொண்டிருந்தான். ''என் ஸார் ! உங்க மனைவியார் பேசவே மாட்டேன் என்கிறாங்க?'' என்று கேட்டவாறு இருந்தார்கள் அவர்கள்.

''மணி இரண்டாகப் போகுது. வண்டி இன்னும் வெல்லிங்டனையே தாண்டினபாடு இல்லையே !''

''அடி, ஏண்டி கவலைப்படறே ?''

''எனக்குப் பசிக்குதே !''

''அப்படிச் சொல்லேன். உம்... பிஸ்கட் இருக்கே'' என்ற அனிலா பெரியதொரு பிஸ்கட் டப்பாவைத் திறந்து விநியோகம் செய்து கொண்டே வந்தவள் பெரியவரிடமும் நீட்டினாள்.

''பிஸ்கட் எடுத்துக் கொள்ளுங்க ஸார் !''

''வேண்டாம்....!'' என்று அவர் மறுத்து விடவே, அவளும் வற்புறுத்தவில்லை.

அவன் முறை வந்த போது அவன் கையை நீட்ட, டப்பாவை இழுத்துக் கொண்டாள் அனிலா. ''உங்களுக்கு எங்க கையால் தரமாட்டோம், ஸார். அப்புறம் உங்க மனைவியாருக்குக் கோபம் வரும். உங்க பங்கையும் அவர்களிடமே தரேன். ஒன்று நன்றாகத் தருவார்கள். ஒன்று ஒன்றாகத் தின்னுங்கள்'' என்றவாறு அந்தப் பெண்ணிடம் நீட்டினாள்.

தலை குனிந்தவாறு மறுத்தாள் அவள்: ''என்ன ஸார் இது? எடுத்துக் கொள்ளச் சொல்லுங்க ஸார்!'' என்று தலைக்குத் தலை கூவினார்கள். அவன் அவள் காதோரமாகப் போய் என்ன சொன்னானோ என்னமோ ?... அவள் தயங்கித் தயங்கி ஒரே ஒரு பிஸ்கட்டை எடுத்தாள்.

'கொல்'லென்ற சிரிப்புக் கிளம்பியது: ''ஐயோ, என்ன சுயநலம்'' என்றவாறு ஒரு குத்து பிஸ்கட்டை எடுத்து அவள் கையில் வைத்தாள் அனிலா அந்தப்

# நவீன வாழ்க்கைக்கு ஏற்றது நெஸ்கா:பே

நெஸ்காஃபே மட்டும்தான் அலாதி
சுவையின்பத்தை அளிக்கவல்லது






தேர்ந்தெடுக்கப்பட்ட தென்னிந்திய ப்ளான்டேஷன் பீபெரி காபிக்கொட்டையைப் பதமாக வறுத்து அதன் இயல்பான மணம் கெடாமல் தயாரிக்கப்பட்டதுதான் நெஸ்கா:பே — உடனே கரையக்கூடிய நூற்றுக்கு நூறு அசல் காபி! ஒரே சமயத்தில் தனித்தனியாக 'ஸ்ட்ராங்'காகவோ 'லைட்'டாகவோ காபியைத் தயாரிக்கமுடிவதால் நெஸ்கா:பே மிகவும் சிக்கனமானதும்கூட!




ஒரு நெஸ்லே
தயாரிப்பு

**5 வினாடிகளில் தயார்!** ஒரு முழு டீஸ்பூன் நெஸ்காஃபேயை கோப்பையில் போட்டு வெந்நீரை ஊற்றி ருசிக்கேற்றபடி சர்க்கரையும் பாலும் சேர்க்க வேண்டியதுதான். காபி தயார்!

**NESCAFÉ***

ISI

நெஸ்கா:பே — தனிச்சிறப்புள்ள தரமான காபி

*நெஸ்கா:பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

JWT-NCE-3144(R)

# தவறாது உபயோகித்தால் போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

சிறியோர், பெரியோர் யாவரிடமிருந்தும் தாமாகவே தேடி வந்த நற்சாட்சிக் கடிதங்கள், ஈறு உபாதைகளையும், பற்சிதைவையும் தடுப்பதிலே போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப் போற்றுகின்றன. இந்த நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரி மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

"உங்கள் தயாரிப்பான போர்ஹான்ஸ் பற்பசையை நான 18 ஆண்டுகளாக விடாது உபயோகித்து வருகிறேன். முன்பு...என் பற்களும் ஈறுகளும் மிக மோசமான நிலையிலிருந்தன. உதாரணமாக பயோரியாவும் பற்சிதைவும் சேர்ந்து எனக்கு வயிற்று வலியையும் சங்கடத்தையும் ஏற்படுத்தின... என் பற்களும் ஈறுகளும் கடந்த 18 ஆண்டுகளாக உன்னத நிலையில் இருந்து வருகின்றன—முற்றிலும் எல்லாம் போர்ஹான்ஸ பற்பசையின் செயலே".

—சங்கர் கே. கும்பார், பம்பாய்.

"கடந்த மூன்று மாதங்களாக எனக்குப் பல் நோவு மற்றும் ஈறு வலியால் அவதி. உங்களுடைய போர்ஹான்ஸ் பற்பசையை நான் உபயோகிக்க ஆரம்பித்த பிறகு, என் பற்கள் அதி வெண்மையாக மின்னுகின்றன. பல்லிலோ, ஈறிலோ வலியே இல்லை".

—என். சங்கர, ஆரணி.

## போர்ஹான்ஸ்

### பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

பற்களைத் தக்கமுறையில் பராமரிக்க இரவிலும், காலையிலும் போர்ஹான்ஸ் பற்பசையையும், போர்ஹான்ஸ் டபிள்-ஆக்ஷன் டூத் பிரஷையும் உபயோகியுங்கள்—உங்கள் பல் வைத்தியரையும் தவறாது பார்த்து வாருங்கள்!




இலவசம்! "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்ற வண்ணப் புத்தகம். தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் கிடைக்கும். இப்புத்தகத்தைப் பெற, (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் தலைகளை இக் கூப்பனுடன் அனுப்புங்கள்: மானேர்ஸ் டென்ட்டல் ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய் 1.

K A

பெயர் ______________________

விலாசம் ______________________

______________________

மொழி ______________________

36 F-202 TAM

## கடவுளுக்குக் கேரோ!

கடவுள் ஒருவர்தான் 'கேரோ'விலிருந்து தப்பியிருந்தார். 'அவரை மட்டும் விட்டு வைப்பானேன்' என்றோ என்னவோ அவரையும் கேரோ செய்து விட்டார்கள் இப்போது! மைசூர் ராஜ்யத்தில் உள்ள தாவண்கிரி என்ற ஊரில் கன்னிகா பரமேசுவரி அம்மன் கோவில் இருக்கிறது. அந்த அம்மனைத்தான் அவ்வூர் மக்கள் கேரோ செய்து விட்டார்கள். ஏன்? அந்தக் கோவில் அர்ச்சகர் ஏதோ காரணத்தால் மக்களின் வெறுப்புக்கு ஆளானார். அதனால் அவர் அம்மனுக்கு பூஜை செய்ய முடியாதபடி தடுத்து விட்டார்கள் ஜனங்கள். கர்ப்பக்கிருகத்தைச் சுற்றி எல்லா ஜனங்களும் நின்றுகொண்டு அர்ச்சகர் உள்ளே போக முடியாதபடி தடுத்து விட்டார்கள்.

ஆதாரம்: 'டெக்கான் ஹெரால்ட்'
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்



பெண்ணை விட்டு ஒரு பிஸ்கட்டை அவனுக்கு ஊட்டிவிடச் சொல்லி, அவர்கள் செய்த ரகளையில் அந்தப் பெண் ராஜஸ்ரீ கோணல் மாணலாக நெளிய, பெரியவர் கோபத்துடன் பொங்கி எழுந்தார். பிறகு, 'நமக்கென்ன வந்தது ?' என்று அடங்கிப் போனார்.

உதகமண்டலம் அடையும் வரை அந்தப் பெண் கண் கசங்கியவாறே யிருந்தாள். பெரியவர் மற்றப் பெண்களை உறுத்துப் பார்த்தார். ''நாளைக்கு நீங்களும் கணவனோடு புறப்பட்டு வரத்தான் போறீங்க. அதை மறந்து ரொம்பத்தான் ஆடாதீங்க'' என்று கறுவியவாறு இறங்கி நடந்தார். டிக்கெட் பரிசோதகரிடம் டிக்கெட்டை நீட்டியவாறு அவர் திரும்பிப் பார்த்த போது நடுவில் அவர்களை நடக்கவிட்டுச் சூழ்ந்துநின்று கலகலப்புடன் அவர்கள் வருவது தெரிந்தது. ''வால்கள். வெறும் வால்கள்'' என்று முணுமுணுத்தவாறு நடந்தார். அவருக்கு வேறொரு ஹோட்டலில் அறை பதிவு செய்யப்பட்டிருந்தது.

நாலைந்து நாட்களுக்கு அந்தப் பெண்ணைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தார் அவர். ''என்ன வேதனைப்படுத்துகிறதுகளோ, சனியன்கள்.''

ஒரு நாள் 'போட்ஹவுஸ்'க்குப் பக்கத்தில் போடப்பட்டிருந்த பிரம்பு நாற்காலியில் அந்தப் பெண் அமர்ந்திருப்பதைப் பார்த்தார் அவர். சிவப்புப் புடவையின் மேல் பித்தானில்லாத முழுக்கை ஸ்வெட்டரை அவள் அணிந்திருந்த விதம் கவர்ச்சியாயிருந்தது. இவரைப் பார்த்ததும் அவள் எழுந்து நின்றாள் மரியாதையுடன்.

''என்ன குழந்தே ! சௌக்கியமா?'' என்று அவர் கேட்க, குனிந்தவாறு தலையை அசைத்தாள்.

''இன்னும் அந்தச் சனியன்களோடுதான் இருக்கிறீர்களா ?''

விலுக்கென்று நிமிர்ந்தாள் அவள்: ''ஏன்? ஏன் அவங்களைத் திட்டறீங்க?'' என்றாள் அவள் விழித்தவாறு.

''என்னம்மா இது?'' அவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''என்ன இப்படிக் கேட்கிறே? உங்க தனிமையைக் கெடுத்து, உனக்கு வெறுப்பு காட்டறாங்களே !''

''அதுக்கு நான் அவங்களுக்கு நன்றி தானே சொல்லணும்?'' அவள் சொன்னாள், அழுத்தமாக. ''எங்களவருக்குக் கொஞ்சம் கூச்சமான சுபாவம். பெண்களிடம் பேசவே மாட்டார். ஏன், என்கிட்டேயே கூடப் பேசவோ பழகவோ கூச்சப்பட்டுக் கொண்டிருந்தார். இப்ப இவர்களோடு பேசிப் பழகி அந்தக் கூச்சம் இப்ப அவருக்குக் கொஞ்சம் கூடக் கிடையாது.''

''பின்னே, ஏன் ரயிலில் நீ 'உம்' என்றிருந்தாயாம்?''

''கல்யாணமாகி ரெண்டு நாள்தானே ஆகிறது. முதல் தடவையாக அவரோடு புறப்பட்டு வந்தேன். கூச்சமிருக்காதா ? இன்னொரு முக்கியமான விஷயம். அந்தப் பெண்கள் என் கல்லூரித் தோழிகள். அத்தனையும் என் ஏற்பாடு.''

படகுக்கான டிக்கட் வாங்கி வந்த வாலிபன் ஸ்ரீராம் 'ஹலோ ஸார்' என்று கை குலுக்கியதோ, மனைவியுடன் படகு ஏறிக் கொஞ்ச தூரம் சென்றதோ கூடத் தெரியாத வகையில் பிரமித்துப் போய் நின்றிருந்தார் அந்தப் பெரியவர்.

**பி. கு. எழுதிக்கொண்டே போனால் படித்துக்கொண்டே போவதா? மலை ஏறும் ரயில் இஞ்சினைப் பின்னால்தானே பொருத்துவார்கள்? அந்தப் பெண்ணின் கண்ணில் கரித்தூள் எப்படி விழும்? ீங்கள் ஒரு சரியான ஏப்ரல்.**




"அம்மா! கோயிலுக்குப் போக நேரமாகிவிட்டதே! புறப்படவில்லையா?" என்று கேட்டான் சிறுவன்.

தினமும் கோயிலுக்குப் போகிறவள் அவன் தாயார். நாள் தவறினாலும் தவறலாம். அவள் கோயிலுக்குப் போகத் தவறியதில்லை. அது மட்டுமா? தாயாருக்கு எத்தனைதான் வேலையிருந்தாலும் விடாப்பிடியாக அவளை இழுத்துச் செல்வான் பையன். என்ன சொன்னாலும் விடமாட்டான். 'இன்றைக்கு நிறைய வேலை இருக்கிறதடா, கண்ணா! நாளை போய்க் கொள்ளலாமே!" என்பாள் தாயார். அவனைச் சோதிக்கத்தான் அவள் அப்படிச் செய்தாள். ஆனால் அவன் அடம் பிடித்து அழுது தீர்த்து அவளைக் கோயிலுக்கு அழைத்துப் போய் வந்த பின்னரே ஓய்வான்.

அம்மாவுக்கு ஒரே ஆச்சரியம்! ஒரே ஆனந்தம்! 'இந்த நண்டுக்கு இப்போதே ஆண்டவனிடம் எத்தனை பக்தி பார்!' என்று அகமகிழ்ந்து போவாள். தலை போகிற காரியமாயிருந்தாலும் அந்த நேரத்துக்கு அதை மூட்டை கட்டி வைத்துவிட்டு அவனுடன் கோயிலுக்குப் புறப்பட்டு விடுவாள். அன்றும் அப்படியேதான் அவன் கூப்பிட்டவுடன் புறப்பட்டு விட்டாள்!

குழந்தைகளின் மனத்தைப் புண்படுத்தக் கூடாது என்பது அவள் எண்ணம். அவர்கள் போகிற வழியே விட்டுப் பிடிக்க வேண்டும் என்பதும் அவள் கருத்து. அதோடு அவள் குழந்தை தவறான காரியமா செய்கிறான்? கோயிலுக்குப் போகவேண்டுமென்றுதானே சொல்லுகிறான்? குழந்தை ஒரு நல்ல காரியத்தைச் செய்யும்பொழுது அதற்கு ஆக்கமளிப்பதல்லவா பெற்றோர் கடமை?

ஆனால், உண்மையில் ஆண்டவனிடமிருந்த பக்தியா அந்தப் பையனை அப்படி இழுத்துச் சென்றது என்று கேட்டால், இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில், அன்று அவன் தன் ஆசையை அடக்க முடியாமல், "அம்மா! அதோ பூசாரி போட்டுக் கொண்டிருக்கிறாரே, அது போன்ற தொப்பி எனக்கு வாங்கித் தருகிறாயா அம்மா?" என்று கேட்டு விட்டான்.

அப்பொழுதுதான் தாயார் புரிந்து கொண்டாள். 'தன் மகன் ஆண்டவனிடம் அபார பக்திபூண்டு கோயிலுக்கு வரவில்லை. கோயில் பூசாரி அணிந்து கொண்டிருக்கும் அழகிய தொப்பியின் மோகத்தில்தான் வந்திருக்கிறான்!' என்று! அந்தத் தொப்பிக்குத்தான் எத்தனை காந்த சக்தி! அந்தத் தொப்பியின் உதவி கொண்டே அவனுக்கு ஒரு நல்ல பாடம் புகட்டத் திட்டமிட்டாள்.

"அந்த மாதிரித் தொப்பியை நீயும் நானும் கடைசியாக அணிந்து கொள்ள முடியாது. நன்னடத்தையும் நல்லொழுக்கமும் உள்ளவர்களே அதை அணிந்து கொள்ளலாம்" என்றவள், அதோடு நிறுத்திக் கொள்ளவில்லை; நன்னடத்தை, நல்லொழுக்கம் என்றால் என்ன என்பதையும் அவனுக்கு எடுத்துக் கூறினாள்.

அன்னையின் பேச்சிலே கருத்தைச் செலுத்திய சிறுவன் அந்தக் கணமே ஓர் உறுதி பூண்டான். 'உண்மையே பேசுவேன். உயிரினம் அனைத்திடமும் ஒன்றுபோல அன்பு செலுத்துவேன். ஒழுக்கத்தில் உயர்ந்தவனாக வாழ்வேன். சீரிய நடத்தையைக் கடைப்பிடிப்பேன். மறந்தும் தவறான பாதையில் செல்ல மாட்டேன்' என்று அன்னையின் எதிரிலேயே வாக்களித்தான்.

மகனின் குரலிலே தொனித்த உறுதியைக் கண்டு தாயார் புளகமுற்றாள். தன் மகன் சொன்னால் சொன்னபடி நடந்து காட்டுவான் என்ற நம்பிக்கை அவளுக்கு ஏற்பட்டது. "அப்பா, குழந்தாய்! அப்படியானால் அந்தத் தொப்பி உன் தலையை எப்பொழுதிலிருந்தோ அலங்கரிக்கத் தொடங்கி விட்டதே! கண்ணால் கண்டால் தான் தொப்பியா? கண்ணால் காண முடியாது போனாலும் உன் தலையை அலங்கரிக்கும் ஒழுக்கம் என்னும் தொப்பி உன் கௌரவத்தை உயர்த்தும். அற வாழ்வை வழுவற நடத்தக் கற்றுக் கொள்!" என்று அம்மா ஆசி கூறினாள்.

அன்னையின் வாக்கும் ஆசியும் எங்காவது பொய்ப்பதுண்டா? அவளது வாக்கை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு, வாழ்க்கையைச் சீரிய முறையிலே வாழ்ந்து காட்டியதோடு, பர்மாவின் பிரதம மந்திரியாகவும் திகழ்ந்தான் அந்தப் பையன்.

அந்தப் பையன்தான் 'ஊநு' என்னும் பர்மியத் தலைவர். அவரது தலையை அலங்கரிக்கும் ஒழுக்கம் என்னும் தொப்பி இன்றும் அவர் கௌரவத்துக்குக் கௌரவம் சேர்ப்பதாகவேதான் இருக்கிறது. — ரா. வீ.






S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.

தொலை பேசி எண்: 76103 த. பெ. எண்: 2910 தந்தி: செந்தில்

# ஸ்ரீ இந்தோ மெர்கன்டைல் பண்ட் பிரைவேட் லிட்.

(ரிஜிஸ்டர்ட்: இந்தியன் கம்பெனி சட்டம் 1956க்கு உட்பட்டது)

25, சுந்தரேஸ்வரர் தெரு - மயிலாப்பூர், சென்னை - 4

கீழ்க்காணும் சீட்டு குரூப்புகளுக்கு, 1961-ம் வருடத்திய 24-ம் நம்பர் மதராஸ் சீட்டு பண்டுகள் சட்டத்தின் கீழ் நாங்கள் சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொள்கிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

| வகுப்பு சீரிஸ் சீட்டு தெ. | சீட்டுத் தொகை | மாதத் தவணை | டிக்கெட்டுகள் எண்ணிக்கை | மொத்த காலம் |
|---|---|---|---|---|
| | | **தினசரி சீட்டு** | | |
| A | ரூ. 9,000 | ரூ. 20 தினசரி | 30 | 450 நாட்கள் |
| B | ரூ. 4,500 | ரூ. 10 ,, | 30 | 450 ,, |
| C | ரூ. 2,000 | ரூ. 5 ,, | 40 | 400 ,, |
| D | ரூ. 800 | ரூ. 2 ,, | 40 | 400 ,, |
| E | ரூ. 400 | ரூ. 1 ,, | 40 | 400 ,, |
| | | **மாதாந்திர S. T.** | | |
| A | ரூ. 6,000 | ரூ. 200 மாதத்துக்கு | 30 | 30 மாதங்கள் |
| B | ரூ. 3,000 | ரூ. 100 ,, | 30 | 30 ,, |
| C | ரூ. 1,500 | ரூ. 50 ,, | 30 | 30 ,, |
| D | ரூ. 750 | ரூ. 25 ,, | 30 | 30 ,, |
| E | ரூ. 600 | ரூ. 20 ,, | 30 | 30 ,, |
| F | ரூ. 450 | ரூ. 15 ,, | 30 | 30 ,, |
| | | **மாதாந்திர L. T.** | | |
| A | ரூ. 30,000 | ரூ. 500 மாதத்துக்கு | 60 | 60 மாதங்கள் |
| B | ரூ. 15,000 | ரூ. 250 ,, | 60 | 60 ,, |
| C | ரூ. 7,500 | ரூ. 125 ,, | 60 | 60 ,, |
| D | ரூ. 3,600 | ரூ. 60 ,, | 60 | 60 ,, |
| E | ரூ. 1,800 | ரூ. 30 ,, | 60 | 60 ,, |
| F | ரூ. 1,200 | ரூ. 20 ,, | 60 | 60 ,, |

இதர விவரங்களுக்குத் தேவையான குரூப்பை குறிப்பிட்டு எழுதவும்:

## இந்தோ மெர்கன்டைல் மூலம் சேமித்து பலன் அடையுங்கள்

M. V. சுப்ரமணியம்
மேனேஜிங் டைரக்டர்

என்னுடைய வீடு இருண்டு கிடக்கிறது. நான் அவ்வீட்டிலிருந்து வெளியே இழுத் தெறியப்பட்டு விட்டேன்.

என் வீட்டைச் சுற்றி இன்னும் பல வீடுகள் சிறிதும் பெரிதுமாய் நிற்கின்றன. அவை ஒவ்வொன்றும் எனக்குப் பழக்க மானவை. எனது வீட்டோடு தொடர்பு கொண்டவை. எனக்குப் பழக்கமில்லாத சில வீடுகளும் அங்கே இருக்கின்றன. அவற்றி லெல்லாம் விளக்குகள் எரிகின்றன. என் வீடு மட்டும் இருண்டு வெறிச்சோடிப் போய்க் கிடக்கிறது.

நான் எங்கே போவேன்? எங்கே போவது?... திகைத்து நிற்கிறேன்.

''ஏன் நிற்கிறாய்? வேறு வீடு பார்த்துக் கொண்டு போ! இனி உனக்கு இந்த வீட்டில் இடமில்லை.''

என்னை என் வீட்டிலிருந்து இழுத்து வெளியே எறிந்தவன் இவ்வாறு கூவுகிறான்.

நான் சுற்றுமுற்றும் பார்க்கிறேன். பார்வைக்கு எட்டிய தூரம் வரை பல வீடுகள், பலவிதமான வீடுகள் தென்படு கின்றன. எல்லா வீடுகளிலும் விளக்குகள் எரிகின்றன. சில விளக்குகள் பிரகாசமாய்த் தெரிகின்றன. சில மங்கலாக மினுக்கு கின்றன.

ஓ.... எல்லா வீடுகளிலும் விளக்குகள் எரிகின்றன என்று எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்லிவிட முடியும்? விளக்கில் லாத வீடுகளும் — என் வீட்டைப் போல்— அங்கே இருண்டு வெறிச்சோடிக் கிடக்கலாம். அவற்றில் குடியிருந்தவர்கள் என்னைப்



போலவே இப்போது வெளியில் திகைத்து நின்று தவித்துக் கொண்டிருப்பார்கள்.....!

''இன்னுமா நிற்கிறாய்? போ ! வேறு வீடு பார்த்துக் கொள்ளப் புறப்படு !''

அவன் மீண்டும் என்னை விரட்டுகிறான்.

''என்னை ஏன் இந்த வீட்டிலிருந்து வெளியேற்றி விட்டாய் ?'' — ஆத்திரத்தோடு நான் கேட்கிறேன்.

''உனக்கு இதில் குடியிருக்கக் கொடுத்த கால தவணை தீர்ந்துவிட்டது.''

''இதை ஏன் என்னிடம் நீ முன்கூட்டியே அறிவிக்கவில்லை ?''

''உன்னை இவ்வீட்டில் குடியேற விட்ட போது நமக்குள் அந்த ஒப்பந்தம் கிடையாது. வீட்டைக் காலி செய்ய முன்னறிவிப்புத் தர வேண்டும் என்று நீயும் கேட்கவில்லை ; நானும் கொடுக்கவில்லை.''

''அதனால் நீ நினைத்தபோது நான் என்னுடைய வீட்டைக் காலி செய்துவிட வேண்டியதுதானா?''

''ஆமாம்; ஒவ்வொரு நிமிடமும் அதற்கு நீ தயாராயிருக்க வேண்டும். ஏனென்றால், முன்னறிவிப்புத் தரப்படமாட்டாது என்பது உனக்குத் தெரியும்.''

''இது அநியாயம் !'' என்று கத்துகிறேன் நான்.

''எந்த ஒரு நியாயத்துக்கு முன்னாலும் அகரத்தைச் சேர்த்துக் கொள்வது எளிது'' என்று சொல்லி விட்டு அலட்சியமாகச் சிரிக்கிறான் அவன்.

''அதேபோல் அநியாயத்தின் முன்னுள்ள அகரத்தை எடுத்து விடுவதும் எளிதே!''

''புரிந்து கொண்டாயா? விஷயம் அவ்வளவுதான். உன்னுடைய நியாயம் உன் சொந்த விருப்பு — வெறுப்பையும், சுயலாபத்தையும், தேவையையும் பொறுத்ததாகவே இருக்கும். மற்றவருக்கும் அது அவ்வாறே அமையும். அதனால் இடத்துக்கு இடம், நபருக்கு நபர் நியாயம் அநியாயமாகவும், அநியாயம் நியாயமாகவும் மாறிவிடும். ஆகவே, இது நியாயம், அது நியாயம் என்று பேசாதே.''

நான் மௌனமாய் நிற்கிறேன்.

''காலத்தை வீணாக்குகிறாய். புறப்படு ! வேறு வீடு பார் ! கிடைத்ததும் வந்து சொல் ; அதிலே குடியேற உனக்கு அனுமதி தருகிறேன்.''

''இந்த வீட்டை நீ என்ன செய்யப் போகிறாய்?'' என்று துயரப் பொருமலுடன் கேட்கிறேன் நான்.

''அழித்துவிடப் போகிறேன்'' என்கிறான் அவன் நகைத்துக் கொண்டே.

''வேறு எவரையும் இதில் குடியமர்த்த மாட்டாயா ?''

''இடித்துத் தகர்த்தபின் இதையே மீண்டும் புதுப்பிப்பேன். அப்போது புதிதாக எவரேனும் இதில் குடிவரலாம்.''

''இந்த வீட்டை நிர்மாணித்து நாற்பது வருடங்கள்தாமே ஆகின்றன ?''

''அதனாலென்ன ?''

''அதோ, அந்த வீடு எண்பது வருடங்களாக இருக்கிறது. அதிலே விளக்கும் எரிகிறது.''

''அதற்கும் அப்பால் ஒரு சிறிய வீடு தெரிகிறது பார், அது இருண்டு கிடக்கிறது! அதைக் கட்டி எட்டு மாதங்களே ஆகின்றன அதுவும் இடிக்கப்படவிருக்கிறது!''

''ஏன் இப்படி ?''

''ஒவ்வொரு வீடும் கட்டப்படும்போது அதற்கென ஒரு கால அளவு நிர்ணயிக்கப்படுகிறது. அதற்கேற்றபடி கட்டுமான தளவாடங்களும் கலவைப் பொருட்களும் உபயோகப்படுத்தப்படுகின்றன.''

அந்த இரக்கமற்றவனுடன் நின்று விதண்டாவாதம் பண்ணிக் கொண்டிருக்க விரும்பாமல் அங்கிருந்து நழுவுகிறேன்.

எங்கேனும் வாடகைக்குப் புதிய காலி வீடு தென்படுகிறதா எனப் பார்த்துக் கொண்டே நடக்கிறேன்.

தொலைதூரம் சென்றபின் ஒரு காலி வீடு இருப்பது தெரிகிறது. ஆவலுடன் அவ்வீட்டருகில் சென்று எட்டிப் பார்க்கிறேன்.

என்ன ஏமாற்றம்! அது புதிய வீடு அல்ல; புதுப்பிக்கப்பட்ட பழைய வீடு. மேலும், அந்த வீட்டில் நான் எப்போதோ குடியிருந்திருக்கிறேன். இன்றுபோல் அன்றும் அவ்வீட்டிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறேன். எனக்கு அது பிடிக்காத வீடு. அதில் குடியிருந்த போது பல கஷ்டநஷ்டங்களை அநுபவித்திருக்கிறேன். எனவே இப்போதும் அதே வீட்டை வாடகைக்குப் பிடித்துக் குடியேற எனக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை.

மேலே நடக்கிறேன். மேலே மேலே நடக்கிறேன்.

இன்னொரு காலி வீடு புலப்படுகிறது. ஓடிப் போய்ப் பார்க்கிறேன். என்ன ஏமாற்றம் ! அதுவும் புதுப்பிக்கப்பட்ட பழைய வீடுதான். நான் குடியிருந்து காலி செய்து விட்ட மிகப் பழம் வீடு.

இப்படியே ஏழெட்டு வீடுகளைப் பார்க்கிறேன். எல்லாம் எனக்குப் பழைய வீடுகள். பல துன்ப துயரமான அசௌகரியங்களை அநுபவித்துச் சலித்துப் போய்க் காலி செய்து விட்ட வீடுகள்.

நான் சோர்ந்து போகிறேன். சோர்வுடன், சற்று முன்னால் நான் வெளியேற்றப்பட்ட அதே வீட்டுப் பக்கம் திரும்பி வருகிறேன்.

அந்த வீட்டைப் பார்த்ததும் எனக்குத் துணிவான ஓர் எண்ணம் தோன்றுகிறது? அவ்வீட்டுச் சொந்தக்காரனுக்குத் தெரியாமல் மறுபடியும் அதில் குடிபுகுந்துவிடலாமா என்ற எண்ணமே அது. சுற்று முற்றும் திருதிருவென விழித்துப் பார்த்தபடி அதனருகில் செல்கிறேன்.

என்ன அழகான வீடு இது ! இந்த வீட்டில் நான் குடியிருந்தபோது அவ்வளவு கண்ணும் கருத்துமாக இதைக் காத்து வந்தேன், தெரியுமா ? ஒரு வருடம், இரண்டு வருடங்கள் இல்லை; நாற்பது வருடங்கள் இதிலே வாசம் செய்திருக்கிறேன். அந்நாற்பது வருட காலத்தில் என் அறிவு, ஆற்றல், உழைப்பு அவ்வளவையும் இவ்வீட்டைப் பேணிப் பாதுகாப்பதற்கே செலவிட்டிருக்கிறேன். இது வாடகைக்குக் குடியிருக்கும் வீடு என்ற நினைப்பே இல்லாமல் இதை என் சொந்த, நிரந்தரமான வீடாக எண்ணி வந்தேன். இடையில் பல முறை இவ்வீட்டுக்கு ஏதேதோ பழுதுகள் ஏற்பட்

டிருக்கின்றன: ஒரு சமயம் கூரையே இடிந்து விழும்படியான விபத்தும் உண்டானது. அப்போதெல்லாம் வீட்டுச் .சொந்தக்காரனிடம் சொல்லாமல் நானே என் சுய முயற்சியால் பழுதுபார்த்துச் சரிப்படுத்திக்கொண்டு விட்டிருக்கிறேன். இந்த விவரங்கள் அவனுக்குத் தெரியாமல் இராது. ஆனால் அவை பற்றி என்னிடம் அவன் ஏதும் விசாரித்துக் கொள்வதில்லை. இப்படி யெல்லாம் போற்றிப் பராமரித்து வந்த எனக்கு இப்போதுதான் தெரிகிறது, இது சொந்த வீடு அல்ல என்று ! எவ்வளவு பெரிய மூடன் நான் !

ஆயினும் இந்த வீட்டை விட்டுவிட மனம் வரவில்லை. அவனை எப்படியும் ஏமாற்றி விட்டு மறுபடியும் இதில் குடிபுகுந்துவிட வேண்டும் என்ற தீர்மானத்துடன் அருகில் ஓடுகிறேன். உள்ளே செல்ல வழி தேடுகிறேன். வழி எங்கே ?

அந்த வீட்டுக்கு இரண்டு சன்னல்களும், ஐந்து வாயில்களும் உண்டு. அவற்றிலே எந்த வாயில் வழியாக நான் வெளியேறினேன் ? அதாவது, இவ்வீட்டுக்குரியவனால் சற்றுமுன் எவ்வழியில் இழுத்தெறியப்பட்டேன் ? எனக்கு வழியே நினைவில்லை !

சரி; ஆதியில் இவ்வீட்டிலே எந்த வாயில் வழியாக வந்து குடிபுகுந்தேன்? அதுவும் இப்போது ஞாபகமில்லை ! என்ன மோசமான மறதிக்காரன் நான் !

என்னையே கடிந்து கொண்டபடி அந்த வீட்டின் ஒரு சன்னலண்டை போய் நின்று உள்ளே எட்டிப் பார்க்கிறேன். அது கண்ணாடி சன்னல். கண்ணாடிக்குப் பாதுகாப்பாக ஓர் ஒற்றைக் கதவு. அக்கதவு பாதியளவு மூடப்பட்டிருக்கிறது. உள்ளிருக்கும் கண்ணாடியில் நான் பிரதிபலிக்கிறேன். பாதரசப் பூச்சுக் கண்ணாடி அது. அதனால் அதன் உட்பகுதி எனக்குப் புலனாகவில்லை. என்னை நானே பார்த்துக் கொண்டு நிற்கிறேன்.

இந்த வீட்டிலே முன்பு நான் குடியிருந்த போது இதே சன்னல் வழியாகக் கோடானு கோடி காட்சிகளைப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் இக்கண்ணாடியில் என்னை நானே ஒருபோதும் பார்த்துக் கொண்டதில்லை. தெரிந்தால்தானே பார்ப்பதற்கு?...

இப்போது தெரிகிறது ! என்னை நான் பார்க்கிறேன். ஆனால் என்னைத் தவிர, வேறொன்றையும் அதன் வழியாக என்னால் பார்க்க முடியவில்லை. இன்னொரு சன்னலும் இவ்வாறே மூடிக் கிடக்கிறது.

வீட்டின் கீழண்டைப்புறம் இரண்டு வாயில்கள். முன்னும் பின்னும் அமைந்த அவற்றை நெருங்கிப் பார்க்கிறேன். அவை சாத்திக் கிடக்கின்றன. சிறிதளவு இண்டு இடுக்கு இடைவெளியும் புலப்படாத அத்தனை இறுக்கம், சுருக்கம் !

அங்கிருந்து ஓடி மற்றொரு வாசலைப் பார்க்கிறேன். அது மேலண்டைப் புறத்தின் பக்கவாட்டு வாயில். அதற்குக் கதவு கிடையாது. ஒரு திரை மட்டுமே தொங்கிக் கொண்டிருக்கும். ஆனால் அந்தத் திரையைச் சுருட்ட முடியாது: ஒதுக்கவும் இயலாது. நான்கு முனைகளையும் இழுத்துக் கட்டப்பட்ட தடிப்புத் திரை அது. இவ்வீட்டிலே நான் குடியிருந்தபோது அந்தத் திரை மிக மெல்லிய துகில் போலத்தான் இருந்தது; இப்போதோ இரும்புத் தகடு மாதிரி இறுகிக் காணப்படுகிறது. இந்தக் கடினத் திரையால் மூடப்பட்டிருக்கும் வாயிலை நான் எப்படிக் கடப்பேன்?

வேறொரு வாயிலுக்குத் திரும்பி வருகிறேன். வாயில் என்ற சொல் இந்த வாயிலுக்குத்தான் மிகப் பொருத்தம். ஏனென்றால், அதன் உட்புறம் தந்தக் கம்பிகளும், வெளிப்புறம் இரு கதவுகளுமாக அமைந்திருந்தது அது. கதவுகள் பாதி மூடியும், பாதி திறந்தும் கோணல் மாணலாகச் சரிந்து கிடக்கின்றன. உள்ளே தந்தக் கம்பிகள் மட்டும் ஒன்றோடொன்று இணைந்து கிட்டித்துப் போயிருக்கின்றன. அவற்றை எங்ஙனம் விலக்கிக் கொண்டு உட்புகுவேன்?

கடைசி வாயிலுக்கு வருகிறேன். அந்த வாயில்தான் எனக்குப் பிரதான வாயிலாக முன்பு உபயோகப்பட்டு வந்தது. அதன் வழியாகத்தான் என்னுடைய போக்குவரத்து பகிரங்கமாக நடைபெற்றது. அதுவே எனக்கு மிகவும் பிடித்தமான வாயில். அங்குதான் நான் நிம்மதியாகவும், தட்டுத் தடங்கலின்றி உல்லாசமாகவும் உலாவிக் கொண்டிருப்பேன். அவ்வாயிலுக்கு நடுவில் ஒரு தூண். அதை ஒட்டினாற்போல் உட்புறமாக ஒரு கட்டைச் சுவரும் எழுப்பப்பட்டிருந்தது. இதனால் அது இரு நுழை வாசல்களைக் கொண்டது போல் வெளிப் பார்வைக்குத் தோன்றும். உள்ளே செல்ல ஒரு வழி, வெளியே வர இன்னொரு வழி என்றும் அவற்றைக் குறிப்பிடலாம். நான் அவ்விரண்டு வழியாகவும் வருவேன், போவேன்.

அந்த அழகிய வாசலண்டை போய் எட்டிப் பார்க்கிறேன். சிவப்பும் வெள்ளையுமாக ஏதோ அடைத்துக் கொண்டிருக்கின்றன. இரு வழிகளிலும் அதே போன்ற அடைப்பு!

என் வீட்டின் எல்லா வாசல்களும், சன்னல்களும் இவ்விதமாகச் சாத்திக் கிடக்கின்றன. இனி எந்த வழியாக அதனுள் பிரவேசிப்பேன்?

**ப**லத்த தோல்வியுடனும் ஏமாற்றத்துடனும் திரும்பி வருகிறேன்;

''என்ன, வீடு கிடைத்ததா?'' என்று குறும்பாகச் சிரித்துக் கேட்டுக் கொண்டே என் எதிரே வருகிறான் அவன்.

நான் வீடு தேடச் சென்ற போது வழக்கம் போல் அவன், இன்னொரு வீட்டில் குடியிருந்தவனை வெளியே இழுத்தெறிந்து அவ்வீட்டை இருளடித்து வைத்துவிட்டு இப்போதுதான் வருகிறான். அவனால் வெளியேற்றப்பட்டவன் தொலைவில் நின்று அழுது பிரலாபித்துக் கொண்டிருக்கிறான்.

''தேடிப் பார்த்தேன்; எல்லாம் பழைய வீடுகளாகவே இருக்கின்றன!'' என்று விரக்தியுடன் தெரிவிக்கிறேன்.

''அதாவது ?''

''ஏற்கனவே அவற்றில் நான் குடியிருந்திருக்கிறேன். அந்தப் பழைய வீடுகளே புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவ்வீடுகளில் முன்னிருந்த அசௌகரியங்கள், குறைகள் அவ்வளவும் அப்படியே இப்போதும் இருக்கின்றன. அதனால் எனக்கு அவை அறவே பிடிக்கவில்லை.''

அவன் என்னைப் பார்த்து விஷமச் சிரிப்புச் சிரிக்கிறான். "வாடகை வீடுகள் என்றால் அசௌகரியம் இருக்கத்தான் செய்யும்!"

"இனி நான் என்ன செய்வது? எங்கே போவது?" என்று அழமாட்டாக் குறையாகக் கேட்கிறேன்.

"நீயே யோசித்துச் சொல்லேன்? இனி என்ன செய்யப் போகிறாய்? எங்கே செல்ல விரும்புகிறாய்?" என்று அவன் என்னைத் திருப்பிக் கேட்கிறான்.

சற்றுச் சிந்தித்து விட்டுக் கூறுகிறேன்: "எனக்கு வீடு வேண்டாம். ஓர் இடம் மட்டும் கொடு. அது திறந்த வெளியாயிருந்தாலும் அதிலேயே குடியிருந்து கொள்கிறேன்."

"அப்படியா? சரி; அதோ ஓடும் கங்கை ஆற்றை உனக்குத் தருகிறேன். அதில் போய்க் குடியிருந்து கொள்!"

அவனுக்கு நன்றி சொல்லவும் மறந்தவனாய் உடனே கங்கைக்கு விரைகிறேன்.

ஆழத்தையும், அகலத்தையும், நீளத்தையும் கணக்கிட்டு அறிய முடியாத அளவுக்கு ஆழ்ந்தும் பரந்தும் நீண்டும் பிரவகித்துக் கொண்டிருந்த கங்கை நதியில் ஆனந்தக் களிப்புடன் இறங்குகிறேன். அதன் நடுமையத்துக்குப் போய் நிம்மதியாக, நிரந்தரமாகக் குடியமர்ந்துவிட வேண்டும் என்பது என் விருப்பம்.

கங்கையின் நீர்ப்பரப்பில் இறங்கி நடக்கிறேன், நடக்கிறேன், நடந்து கொண்டேயிருக்கிறேன். அதன் நடு மடி வரையில் சென்ற பின்னும் கங்கை நீர் என் முழங்கால் அளவுக்குமேல் ஏறவில்லை.

கங்கையின் ஆழமே இவ்வளவுதானா?

மெல்ல நீரில் உட்காருகிறேன். என் இரு தோள்களிலும் கங்கை நதியின் கரைகள் இடிபட்டு உரசுகின்றன. பொறுக்க முடியாத நோக்காடு!

உயரத்திலும் அகலத்திலும் கங்கையைவிட நான் பெரியவனா? என்னைக் கொள்ளக் கங்கையால் இயலவில்லை; நான் குடியிருக்க அதன் ஆழமும் பரப்பளவும் போதவில்லை.

ஆறாத் துயருடன் கங்கையை விட்டுக் கரையேறி அவனிடமே வருகிறேன். விஷயத்தைச் சொல்கிறேன்.

அவன் சிரிக்கிறான். சிரித்துக் கொண்டே, "சரி; அதோ தெரியும் அந்த விந்திய மலையையே உனக்குத் தருகிறேன். அதில் போய்க் குடியிருந்து கொள்" என்கிறான்.

விந்தியத்தை நோக்கி நான் விரைகிறேன். அதன் அடிவாரத்தை நெருங்கியதுமே என் உச்சந்தலையில் மேகப் பொதிகள் உராய்ந்து செல்வதை உணர்கிறேன். ஒரு கரிய பெரிய முகில்பாறை என்னை நோக்கித் தாழத் தாழ்ந்து வருகிறது. சட்டென்று குனிந்து கொண்டு கீழே உற்றுப் பார்க்கிறேன். விந்திய மலையின் அடிவாரத்தில் நிற்கும் எனக்கு அதன் சிகர முனை இடுப்பளவு உயரத்தில் தெரிகிறது!

விந்தியத்தைவிட உயரமாயிருக்கும் நான் அதில் எவ்வாறு குடியேறுவேன்?

சோர்வும் களைப்புமாகத் திரும்பி வந்து அவனிடம் விவரம் தெரிவிக்கிறேன்.

அவன் எனக்காக அனுதாபப்படுகிறான். "சரி; இனி என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்கிறான்.

நான் தயங்கித் தயங்கிச் சொல்கிறேன்: "எனக்கு வாடகை வீடு வேண்டாம். ஒரு சொந்தவீடு வேண்டும். கட்டித் தருவாயா?"

"தாராளமாக! ஆனால் அதற்குப் பணம் வேண்டுமே!"

"என்னிடம் ஏது பணம்?"

"அதோ, அந்த வீட்டில் நாற்பது ஆண்டுகள் வாழ்ந்தாயே, சொத்து ஏதும் சேர்த்து வைக்கவில்லையா?"

"சேர்த்து வைத்தேன். எடுத்து வரவில்லை. திடுதிப்பென்று என்னை நீ அவ்வீட்டிலிருந்து வெளியே இழுத்துப் போட்டுவிட்டதால் அதைக் கொண்டு வரவில்லை."

மாடர்ன் ஆர்ட்டிஸ்ட்

மருதாசலம் — 13






''கவலைப்படாதே! உன்னை வெளியேற்றும் போது உன் சொத்துக்கள் அடங்கிய மூட்டை ஒன்றைத் தூக்கி வெளியில் எறிந்தேன். போய்ப் பார்!''

ஆவலுடன் ஓடிப் போய், என் வீட்டருகில் கிடந்த அந்த மூட்டையை எடுத்துக் கொண்டு வருகிறேன்.

''அதை அவிழ்த்துக் காட்டு, பார்க்கலாம்!'' என்கிறான் அவன் கேலிச் சிரிப்புடன்.

பெருமை கலந்த அலட்சியத்தோடு மூட்டையைப் பிரிக்கிறேன் நான். மறுகணம், 'ஹா'வென அலறிக் கொண்டு அப்பால் போய் விழுகிறேன். துடித்துப் பதறி எழுந்து மீண்டும் பார்க்கிறேன்.

நான் அவிழ்த்துக் கொட்டிய அந்த மூட்டையிலிருந்து கடும் விஷம் கொண்ட ஐந்து நாகப்பாம்புகள் புஸ்ஸெனச் சீறியபடி அங்குமிங்குமாக நெளிகின்றன! பிறகு அவை என் பக்கமே திரும்பி என்னைக் கொத்திப் பிடுங்கத் தாவுகின்றன.

கத்திக் கூச்சலிடுகிறேன். ஓலமிட்டு அழுகிறேன்.

அவன் உரக்கச் சிரிக்கிறான். ''இத்தனை காலம் அந்த வீட்டில் வாழ்ந்த நீ, ஏராளமாக இல்லாவிட்டாலும் சிறிதளவாவது பொற்காசுகள் சேமித்து வைத்திருப்பாய் என்று நான் நம்பிக்கையோடு எதிர்பார்த்தேன். ஆனால் நீயோ விஷப் பாம்புகளையே வெகு கருத்தோடு வளர்த்துச் சேமித்து வைத்திருக்கிறாய். இவற்றைக் கொண்டு உனக்கு எப்படி ஒரு சொந்த வீடு கட்டித் தர முடியும்? வேண்டுமானால் இவற்றில் வாடகை வீடு ஒன்றை உருவாக்கித் தருகிறேன்.''

''வாடகை வீடா? அதுவும் இந்தப் பாம்புகளை வைத்துக் கட்டும் வீடா? ஐயோ, அது வேண்டாம்; வேண்டாம்!'' என்று அலறுகிறேன் நான்.

''வேண்டாம் என்றால் எப்படி? இவை தாமே நீ இத்தனை காலம் சேர்த்து வைத்த சொத்துக்கள்?''

எனக்குப் பதில் சொல்லத் தெரியவில்லை, திராணியில்லை. பயப்பிராந்தியுடன் விழிக்கிறேன்.

''வீடு வேண்டும் என விண்ணப்பம் செய்த பின் அதை வாபஸ் வாங்க முடியாது. நீ கேட்டது கேட்டதுதான்; நான் வாக்குக் கொடுத்தது கொடுத்ததுதான். எனவே, இந்த உன் சொத்தைக் கொண்டே உனக்கு ஒரு வீடு கட்டித் தரப் போகிறேன். இனி அதில்தான் நீ குடியிருக்க வேண்டும்.''

இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்தப் பயங்கரமான பாம்புகள் ஐந்தும் ஒன்றுடன் ஒன்று உக்கிரமாகச் சண்டை போட்டுக் கொள்கின்றன. பிறகு ஒன்றையொன்று துரத்திப் பிடித்து விழுங்குகின்றன. விழுங்கி விழுங்கிக் கடைசியில் ஒரே ஒரு பாம்பு பெரிதாய்ப் படமெடுத்து நிற்கிறது.

அவன் தன் கையிலிருந்த மழுவால் அந்தப் பாம்பின் தலையில் ஓங்கி அடிக்கிறான். அது இறக்கவில்லை. ஆனால் தன் சட்டையை உரித்துப் போட்டுவிட்டுச் சரசர வெனத் தவழ்ந்து போய் அவனுடைய காலைச் சுற்றிக் கொள்கிறது. இதையெல்லாம் பார்த்துக் கொண்டு நடுங்கியபடி நிற்கிறேன் நான். அந்தப் பாம்புச் சட்டை படம் எடுத்த கோலத்தில் கீழே கிடக்கிறது.

''இதோ, இந்தப் பாம்புச் சட்டையையே வீடாகக் கொண்டு இதில் கொஞ்ச காலம் நீ குடியிரு. நான் திரும்பி வந்து உனக்குப் புதிய சொந்த வீடு ஒன்று கட்டித் தருவேன்'' என்று புன்னகையுடன் சொன்ன அவன், ''ஞாபகமிருக்கட்டும்! இது வாடகை வீடுதான்! அதை மறந்து விடாதே!'' என்கிறான், என்னை எச்சரிப்பது போல். பிறகு அவன் அங்கிருந்து போய் விடுகிறான்.

வேறு போக்கிடமின்றி நானும் அந்தப் பாம்புச் சட்டையில் குடிபுகுகின்றேன்.

**கா**லம் ஓடுகிறது. நான் காத்திருக்கிறேன். ஒரு சொந்த வீட்டைப் பெற





**ஐயோ, காப்பி!**

கடைகளில் சர்க்கரை மிக அதிக விலைக்கு விற்கப்படுவதை விரும்பாத கேரளத்து மக்கள் தங்கள் மனக் கசப்பை மந்திரிகளுக்குத் தெரியப்படுத்தினார்கள். எப்படி? மந்திரிகள் கிராமங்களில் சுற்றுப்பயணம் செய்தபோது அவர்களுக்குச் சர்க்கரை போடாத காப்பி, தேநீர் ஆகியவை கொடுக்கப்பட்டன! கேரள சுகாதார மந்திரி திரு பி. வெல்லிங்டன் தெரிவித்த விஷயம் இது!

ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'
தகவல்: ஆர். சரோஜா

---

வேண்டுமென்று பேராவலுடன் அந்த வாடகை வீட்டில் தங்கிக் காத்துக் கொண்டிருக்கிறேன். அவன் வருவான், வருவான் என்று அவனையே வழிமேல் விழி வைத்து எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறேன். அவன் வரவையே தியானமாகக் கொண்டு தவம் இருக்கிறேன்.

காலம் பறக்கிறது. அவன் வரவில்லை. ஏமாற்றம் நெஞ்சை அரிக்கிறது. துயரம் மலையாக வளர்கிறது. வேதனையுடன் கண்ணீர் வடித்தபடி அவன் வரவை எதிர்பார்க்கிறேன்.

நான் வடித்த கண்ணீரெல்லாம் என் எதிரே ஒரு சிறு குளமாகத் தேங்கி நிற்கிறது. அந்தக் குளம் காற்றும் சில்லிட்டுக் கடுங் குளிரால் உறைந்து பனிக்கட்டியாக மாறுகிறது. அந்தப் பனிப் பாளம் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து மேலெழும்புகிறது. ஆவுடையில் பொருத்திய பாணம் போன்ற வடிவிலே அப்பனிப் பாறை உருப்பெற்று நிமிர்கிறது. நான் அதன் உச்சிக்கு நேராகப் படம் எடுத்த உருவிலே அமைந்த பாம்புச் சட்டை வீட்டில் இருந்து கொண்டு அவனை எதிர்பார்த்துப் பார்த்து ஏங்கிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறேன். எனது கண்ணீர் அந்தப் பனிப் பாளத்தின்மீது வழிந்து வழிந்து ஆவுடையில் இறங்கி நிறைகிறது.

என் வீட்டின் மேல் ஒரே புழுதிப் படலம். காற்றில் அடித்துக் கொண்டு வந்து சாயும் சருகுக் குப்பைகள். அவை கனத்துக் கனத்து என் வீடே கலகலக்கிறது. ஆனாலும் நான் அதைப் பற்றியெல்லாம் கவலைப்படவில்லை. அவனுடைய வரவையே எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன்: அவனைத் தவிர வேறு நினைப்பே என்னிடம் இப்போது இல்லை.

அவன் வருவானா? அவன் வருவான்! நம்பிக்கையோடு அவனைக் கூவி அழைக்கிறேன்.

அதோ, அவன் வருகிறான்! என்னைத் தேடியே வருகிறான். எனக்கு ஒரு சொந்த வீடு கட்டித் தர இதோ, வந்துவிட்டான்.

''வரவேண்டும், வரவேண்டும்!'' என்று அவனை வணங்கி வரவேற்கிறேன்.

அவன் என்னைப் பார்த்து அழகாகச் சிரிக்கிறான். ''எப்படி இருக்கிறது, உன் பாம்புச் சட்டை வீட்டு வாசம்?'' என்று வினவுகிறான்.

''ஐயோ, எனக்கு இந்த வாடகை வீடு வேண்டாம்! ஒரு சொந்த வீடு கொடு! அதில் என்னைக் கொண்டு போய்க் குடியேற்று!'' என்று இறைஞ்சுகிறேன்.

''பெரிய வீடு வேண்டுமா? சிறிய வீடு வேண்டுமா?''

''இன்னுமா என்னைச் சோதிக்கிறாய்? எதுவாயிருந்தாலும் பரவாயில்லை. எனக்குச் சொந்த வீடு வேண்டும். அதைக் கொடு.''

''ஏற்கனவே உனக்கென்று உன் அருகிலேயே ஒரு வீட்டை அமைத்திருக்கிறேனே, நீ பார்க்கவில்லையா?''

''எங்கே? எங்கே என் வீடு?''

''இதோ, இதுதான்!''

அவன் சுட்டிக்காட்டிய இடத்தைப் பார்க்கிறேன்.

என் கண்ணீரால் ஆன பனிக்கட்டி லிங்கத்தின் அருகில் ஒரு தும்பைச் செடி பசுமைச் செழிப்புடன் வளர்ந்திருக்கிறது. அந்தச் செடியின் பாம்புக் குமிழில் ஒரே ஒரு தும்பை மலர் — சின்னஞ்சிறு வெண்ணிற மென்மை மலர் — பூத்திருக்கிறது. அதைத் தான் அவன் எனக்குச் சுட்டிக்காட்டுகிறான்.

''இந்தத் தும்பை மலரா என் வீடு? இதிலேயா நான் குடியேற வேண்டும்?''

''ஆமாம்: இதுதான் உன் சொந்த வீடு! உனக்கே உரிய தனி வீடு!''

இதுகாறும் நான் குடியிருந்த பாம்புச் சட்டை வீட்டிலிருந்து என்னை அவன் அன்புடன் கனிவாகத் தழுவி அணைத்தவாறு வெளியே அழைத்து வந்து அந்த அழகிய சிறு தும்பை மலரில் குடியேற்றுகிறான். எனக்கு அந்த மலர் மிக பொருத்தமாகவும் போதுமானதாகவும் இருக்கிறது. நான் அவனை நன்றிப் பெருக்குடன் அஞ்சலி செய்கிறேன்.

என் கண்ணீரால் ஆன பனி லிங்கத்தின் மீது அவனுடைய குளிர்ந்த நிழல் படிகிறது. அவன் எங்கே? அவனது தண்ணிழல் மட்டுமே எனக்கு இப்போது தெரிகிறது.

திடீரென்று ஒரு பெருங்காற்று வீசுகிறது. அது பார்வைக்குப் புலனாகிறது. ஆம்: அந்த மஞ்சள் நிறக் காற்று வளையம் வளையமாக வீசிச் சுழல்கிறது. அதன் வேகச் சுழற்சியிலே, தும்பைச் செடியின் சிறு காம்பில் சொருகாக அமைந்திருந்த என் மலர் வீடு—என்னையும் சேர்த்து — அப்படியே அலக்காகக் சுழன்று கொண்டு போய், அந்தப் பனி லிங்கத்தின் ஆவுடையில் விழுகிறது.

நானும் என் தும்பை மலர் வீடும் அதனில் பனி நீராய்க் கரைகிறோம்.

# யாவற்றிலும் முதன்மை




★ கச்சிதமான நயம்
★ ஒப்பற்ற சுவை
★ மொரமொரப்பான புதுமை
★ ஈடிணையற்ற போஷாக்கு யாவற்றிலும் முதன்மை—




# க்ளுகோ

பிஸ்கட்டுகள்




பார்லே க்ளுகோ இந்தியாவிலேயே உன்னத
விற்பனையுள்ள பிஸ்கட்டாக விளங்குவதில் வியப்பில்லை!

**ச**ந்திராவுக்கு ஒரே கோபம்: அவள் கோபத்தின் அளவைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால், சமையலறைப் பாத்திரங்களைக் கேட்க வேண்டும். அவள் வேலை செய்யும்போது 'ணங் ணங்' என்று ஒவ்வொரு பாத்திரமும் ஓலக் குரல் எழுப்பின. இத்தனைக்கும் சந்திரா ரொம்ப நல்லவள். தன்னிடம் அன்பு காட்டுபவர்களிடம் அன்பைச் சொரிந்து விடுவாள். சிரித்த முகத்துடன் சதா கலகலப்பா யிருப்பாள். அப்படிப்பட்டவளுக்கா கோபம்? யார் மீது? அவள் ஆசைக் கணவன் மீதுதான். உண்மையிலேயே பரமேசுவரன் அவளது ஆசைக் கணவன்தான். அவள் மிகவும் ஆசைப்பட்டுப் பெற்றோர்களிடம் ஒற்றைக் காலில் நின்று அவனையே மணந்து கொண்டாள். இன்னும் நல்ல வரன்கள் வந்தன. சந்திராதான் அத்தனை வரன்களையும் தட்டிக் கழித்து விட்டாள். சந்தன நிற உடலில் வெளிர் நிற டெரிலின் ஸ்லாக்கும், கருப்பு நிற 'ட்வீட்' பாண்டும் அணிந்து கொண்டு புன்னகை தவழும் முகமும், கருண்ட கிராப்புமாக அவன் அவளைப் பெண் பார்க்க வந்த அன்றே கவர்ந்து விட்டான்.

பரமேசுவரன் எம். ஏ. ஒரு பெரிய கம்பெனியில் மானேஜராகப் பணியாற்றி வந்தான். நல்ல சம்பளம். கம்பெனியிலேயே கார் கொடுத்திருந்தார்கள்.

பரமேசுவரனுக்கு அம்மா, அப்பா இருவரும் இருந்தனர். மேலும் விவாகமாகாத தங்கைகள் மூவர் அண்ணா, மன்னி, அவர்களுடைய குழந்தைகள் ஆகியவர்களும் இருந்தனர். பரமேசுவரனின் எடுப்பான தோற்றத்தில் மயங்கித் தன்வசம் இழந்து நின்ற சந்திராவுக்கு அவனுடைய பெரிய குடும்பத்தைப் பற்றிய நினைவே யில்லை. தானும் அவனும் மட்டும் காதல் பறவைகளாக மாறி இன்ப வானில் சிறகடித்துப் பறக்கப் போவதாக இன்பக் கனவு கண்டு கொண்டிருந்த சிறக்கத்திலேயே பரமேசுவரனுக்கு அவள் மாலையிட்டாள். கணவன் வீட்டுக்குப் போன பிறகுதான் அங்கிருந்த மாபெரும் கூட்டத்தைப் பார்த்தாள். சந்திராவுக்கு மயக்கமே வந்து விட்டது. கீழே விழுந்து விடாமல் சமாளித்துக் கொண்டாள்.

பரமேசுவரன் சந்திராவிடம் மிகவும் அன்பாக இருந்தான். அவன் மட்டும்தானா? அவள் மாமியார், மாமனார், நாத்திமார்கள், ஓரகத்தி, அவள் குழந்தைகள் ஆகியவர்கள் எல்லாம் அவளிடம் அன்பைச் சொரிந்தனர். அவளை வீட்டில் ஒரு வேலை செய்யவிடவில்லை. ஆரம்பத்தில் சந்திராவுக்கு இதையெல்லாம் பார்க்க மிகவும் சந்தோஷமாக இருந்தது. ஆனால் போகப்போக அலுத்துப் போய்விட்டது. கல்யாணமாகி இரண்டு மாசங்களுக்குள்ளேயே அவளுடைய உற்சாகம் குன்றிப் போய்விட்டது.

சந்திரா தன் மண வாழ்க்கையைப் பற்றி என்னவெல்லாம் கனவு கண்டாள்!

—காலையில் எழுந்து பல் துலக்கிப் பனிச் சென்று முகம் கழுவிப் பொட்டிட்டுக் கொண்டு கையில் காப்பியுடன் கணவனை எழுப்புவாள். ஸ்நானத்துக்கு வெந்நீர் தயா



# சுதந்திரத் தியாகிகள்!

## ஸோமாஸ்

சாமா

ரித்துவிட்டு, டவலும் கையுமாகக் கணவன் அறைக்குச் சென்று அவனைக் குளிக்கக் கூப்பிடுவாள். பிறகு தட்டை எடுத்து வைத்துப் பரிமாறிவிட்டுச் சாப்பிடக் கூப்பிடுவாள்; ஒவ்வொரு தடவை அவள் அவனிடம் வரும்பொழுதும் அவன் ஏதாவது சேஷ்டைகள் செய்வான் — பின்னலைப் பிடித்து இழுப்பான், கண்களைப் பொத்துவான்; பிறகு...அவளது கன்னம் சிவக்கச் செய்வான் — இப்படியாகத்தானே ஒவ்வொரு காரியத்திலும் விஷமப் பார்வையும், பொய்க் கோபமும் குறும்புப் புன்னகையுமாக இவ்வுலகையே மறந்து, கின்னர, கிம்புருட, வித்யாதரர்கள் வாழும் இன்ப உலகில் அவள் சஞ்சரிப்பாள்.

என்ன இது! எல்லாம் கனவாகவே போய் விட்டனவா?

சந்திரா தன் புக்ககத்தில் கண்டதென்ன? கணவனோடு ஒரு வார்த்தை தனியே பேசக் காலையிலிருந்து இரவு பத்து மணிவரையில் அல்லவா காத்திருக்க வேண்டியிருந்தது!

அவனுக்குக் காப்பி கொடுக்கிற சாக்கில் தனியாக ஏதாவது பேசலாமே என்றால் அண்ணனும், தம்பியும் சேர்ந்து கூடத்தில் உட்கார்ந்து கொண்டு அல்லவா காப்பி சாப்பிடுவார்கள்? போதாக் குறைக்கு நாத்திமார்கள் வேறு! மாமனார் ஒருத்தர் குத்துக்கல்லைப் போலச் சதா கூடத்தில் உட்கார்ந்து கொண்டு வருவோர் போவோர்களையெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பார். ஒவ்வொருவராக ஸ்நானம் செய்து முடித்துச் சாப்பிட உட்காருவார்கள். அவசரம் அவசரமாகச் சாப்பிட்டு விட்டு ஆபீசுக்குப் புறப்படும் கணவன் பரமேசுவரன் அப்பா, அம்மாவிடம் சொல்லிக் கொண்டு போவான். சந்திரா தூரத்தில் நின்று இதைப் பார்த்துக் கொண்டிருப்பாள். சினிமா, நாடகம், சங்கீதக் கச்சேரி என்று எங்கேயாவது போகலாமே என்றால் அதற்கும் கணவனும், மனைவியுமாகத் தனியே போக முடியாது. பெருங் கூட்டம் கூடிவிடும். தங்கைகள், சின்னண்ணனை விட்டு வைக்க மாட்டார்கள். 'சின்னண்ணா, சின்னண்ணா' என்று அவனைச் சுற்றியே வளைய வருவார்கள். பரமேசுவரனும் கொஞ்சம் கூட அலுத்துக் கொள்ளாமல், அவர்கள் இழுத்த இழுப்புக்கெல்லாம் விட்டுக் கொடுப்பான். சந்திராவுக்கு இதைப் பார்க்கும்போதுதான் ஆத்திரம் ஆத்திரமாக வரும்.

இன்று பரமேசுவரன் தங்கைமார்கள் பட்டு, கமலா, நீலா மூவரும் சந்திராவிடம் ஓடிவந்து ''சின்ன மன்னி, உங்களுக்குச் சமாசாரம் தெரியுமா? இன்றைக்குச் சின்னண்ணா எல்லாரையும் சினிமாவுக்கு அழைத்துக்கொண்டு போவதாகச் சொல்லியிருக்கிறான். பாஸ் கிடைத்திருக்கிறதாம்....!'' என்று ஒரே உற்சாகமாகச் சொன்னார்கள்.

சந்திராவுக்கு இரண்டு தடவை இந்தச் சினிமா அனுபவம் கிடைத்திருக்கிறது.

ஒரு முறை அவள் புக்ககத்துக்கு வந்த புதிதில் எல்லோருமாகப் படத்துக்குப் போனார்கள். உள்ளே போய் உட்காருவதற்கும் ஓரகத்தியின் குழந்தைகள் இரண்டும் சிணுங்க ஆரம்பிப்பதற்கும் சரியாக இருந்தது. படம் ஆரம்பமாயிற்று. குழந்தையின் சிணுங்கலும் அதிகமாயிற்று. உடனே படம் பார்ப்பவர்கள் 'உஸ், உஸ்' என்று சத்தமாயினர். மாமனார், மாமியார், ஓரகத்தி ஆகிய யாவரும் சந்திராவையே பார்த்தனர். அவளுக்கு விளங்கி விட்டது. உடனே பெரிதும் சிறிதுமான இரு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு தியேட்டரை விட்டு வெளியேறினாள். இருண்ட சூழ்நிலையிலிருந்து வெளிச்சத்துக்கு வந்ததனால்தானோ என்னவோ குழந்தைகள் இரண்டும் அழுகையை நிறுத்திவிட்டன. ஆனால் மீண்டும் உள்ளே போக முயன்றால் மறுபடியும் வீறிட்டலறத் தொடங்கின; மறுபடியும் ரசிகர்களின் 'உஸ் உஸ்' என்ற சத்தம்! பாவம், என்ன செய்வாள் சந்திரா? படம் முடிகிற வரையில் வெளியிலேயே இருந்தாள். ஆசையாக அலங்கரித்துக் கொண்டு படம் பார்க்க வந்து விட்டுத் தியேட்டர் வராந்தாவிலேயே இருப்பதென்றால் அந்த இளம் இதயத்துக்கு எப்படி இருக்கும்? அது மட்டுமா? 'படம் பார்க்க வந்தால் நண்டு, சிண்டுகளையெல்லாம் அழைத்து வர வேண்டுமா?' என்ற படம் பார்ப்பவர்களின் கேலிப் பேச்சு வேறு. சந்திராவுக்குத் துக்கம் தாங்கவில்லை. இம்மாதிரி அநுபவம் அவளுக்கு இரண்டு தடவை ஏற்பட்ட பிறகுதான் அவள் படத்துக்கே போவதில்லை என்ற முடிவுக்கு வந்தாள். இன்று எல்லோரும் சினிமாப் பார்க்கப் போவதாகச் சொன்னதும் அவளுக்குக் கோபம் வரவில்லை. தாராளமாகப் போய் விட்டு வரட்டுமே என்று முணுமுணுத்தபடி பேசாமலிருந்தாள்.

கணவனோடு இரண்டு நிமிஷம் தனியாய்ப் பேச அவகாசம் கிடைக்காதது கூட அவளுக்குக் குறையாகத் தெரியவில்லை. இதிலே மாமியாரின் அங்கலாய்ப்பை நினைக்கும்போதுதான் சந்திராவுக்கு அழுவதா சிரிப்பதா என்றே தெரியவில்லை. 'மருமகள் வீட்டுக்கு வந்து இத்தனை நாட்கள் ஆகியும் அவள் வயிற்றில் ஒரு பூச்சி, பொட்டுக்கூட ஏற்படக் காணோம்' என்று வீட்டுக்கு வருகிறவர்களிடமெல்லாம் அவள் மாமியார் அலப்புவாள்! வேடிக்கைதான்!

**மா**லை ஐந்து மணிக்கே எல்லோரும் டிரஸ் செய்து கொண்டு தயாராகிவிட்டார்கள்.

'சின்ன மன்னி, நீ படத்துக்கு வரவில்லையா? இன்னும் டிரஸ் பண்ணிக் கொள்ளவில்லையே!'' என்று கேட்டாள் அவள் நாத்தி நீலா.

''இல்லை, நான் வரவில்லை'' என்றாள் சந்திரா சுரத்தில்லாமல்.

''ஏன், உடம்பு சரியில்லையா?''

''அதெல்லாம் ஒன்றும் இல்லை.''

''சின்னண்ணா ஏதாவது சொன்னானா?''

''ஊஹூம். இல்லை.''

இதற்கு மேல் சந்திராவை யாரும் வற்புறுத்திக் கேட்கவில்லை.

ஒரே குதிப்பும் கும்மாளமுமாக எல்லாரும் சினிமாவுக்குப் புறப்பட்டார்கள்.

''சந்திரா, பாலை வாங்கி ஜாக்கிரதை யாக மூடி வை. பூனை குடித்துவிடும். எங்களை வரச் சொல்லிவிட்டு அவன் முன்னாலேயே போய் விட்டான்'' என்று சொல்லிக் கொண்டே மகன்மேல் பழியைப் போட்டபடி மாமியார் வாசலுக்குப் போய்விட்டாள்.

மாமனார் பஞ்சகச்சத்தைச் சரி செய்து கொண்டே, ''நான் வரவில்லையென்றும் அவன் கேட்கமாட்டேன் என்கிறான். ஏதோ பக்திப் படமாம்..... உனக்குத் தலைவலி யாமே? பேசாமல் படுத்துக் கொண்டு தூங்கு. சரியாய்ப் போய்விடும்'' என்று சொல்லிவிட்டு வாசற்பக்கம் நழுவிவிட்டார்.

சந்திரா தனக்குள் பொருமினாள். 'இவ ராக எனக்குத் தலைவலி என்று முடிவுகட்டி விட்டாரா? 'நாங்கள் எல்லோரும் சினிமா வுக்குப் போகிறோம். நீ அகத்தைப் பார்த்துக் கொள்' என்று என்னிடம் சொன்னால் என்ன குடிமுழுகிப் போய்விடும்! இவரை நான் விழுங்கி விடுவேனா?' தனக்குள் சிரித்துக் கொண்டாள் அவள் ஏளனமாக.

தன்னை விட்டுவிட்டு அவர்களெல்லோரும் சினிமாவுக்குப் போனதுகூடச் சந்திராவுக்குத் தப்பாகத் தோன்றவில்லை. பரமேசுவரனின் அலட்சியம்தான் அவள் மனத்தைப் பெரிதும் பாதித்தது. கட்டின கணவனே அலட்சியப் படுத்தினால் அந்த வீட்டு மருமகளை மற்ற வர்கள் எவ்வளவு அவமதிப்பார்கள் என்று சொல்லவும் வேண்டுமா? இன்று கணவன் வந்து தன்னிடம் ஏதாவது பேசிச் சமாதானம் செய்ய வந்தால் சிறிதும் மனம் தளர்ந்துவிடக் கூடாது என்று தீர்மானம் செய்து கொண் டாள். அவள் மனம் ஓரேயடியாகப் பொரு மியது. கணவனின் ஆசை வார்த்தைகளையும் அன்பான அரவணைப்பையும் உதறியெறியத் தன்னைச் சித்தப்படுத்திக் கொண்டாள்.

ஃ ஃ ஃ

சில்லென்ற கரம் அவள் கன்னத்தில் பட்டது. பிறகு அந்த அணைப்பு அவளுக்கு மிகவும் இதமாக இருந்தது. சந்திரா திடுக் கிட்டு அந்தப் பிடியிலிருந்து விலகித் திரும்பி னாள். அங்கு பரமேசுவரன் நின்று கொண் டிருப்பதைப் பார்த்ததும் அவள் பதற்றம் பொங்கியது.

''வந்துவிட்டீர்களா?'' என்று கேட்டாள் சந்திரா. ''எங்கே என்னை ஏமாற்றிவிட்டு நீங்க ளும் அவர்களுடன் சினிமாவுக்குப் போய் விட்டீர்களோ என்று பயந்து போனேன்.''

''சரிதான் போ! நீ என்னைப் புரிந்து கொண்ட லட்சணம் இதுதானா? உன்னிடம் சொல்லி விட்டுத்தானே ஏற்பாடு செய்தேன்? ஒரு வாரமாகப் பிளான் போட்டு, அப்பா, அம்மா இருவரும் பார்க்க ஒரு புராணப் படத்துக்குப் பாஸும், மற்றப் பேர்களெல் லாம் பார்க்க வேறொரு படத்துக்குப் பாஸும் ஏற்பாடு செய்து எல்லோரையும் இவேட்டரில் கொண்டு போய் விட்டுவிட்டு வருவதற்குள் உஷ்...அப்பாடா...'' என்று சிரமபரிகார மாகப் பெருமூச்சு விட்டான் பரமேசுவரன்.

''பதற்றத்தில் எனக்கு எதுவுமே நினை வில்லை... ரொம்ப சிரமமாக இருக்கிறதா? காப்பி போட்டுக் கொண்டு வரவா?'' என்றாள் சந்திரா மிகவும் கனிவோடு.

''உன்னோடு தனியாக ஒரு வார்த்தை பேச முடிகிறதில்லையே என்னும் ஏக்கத்திலே தான் இந்தத் திட்டம் வகுத்தேன். காப்பி போட்டுக் கொண்டு நேரத்தை வீணாக்காதே! இப்படி உட்கார்!'' என்றான் பரமேசு வரன். செல்லமாக அவள் கன்னத்தில் தட்டினான்.

சந்திரா நெளிந்து குழைந்தாள்.

''இன்றைக்கு இன்னும் மூன்றுமணி நேரத்துக்கு வீட்டில் நம் ராஜ்யம்தான்!'' என்று அவள் கரங்களைப் பற்றித் தன் அருகில் இழுத்துக் கொண்டான். சந்திரா பரவசமடைந்து அவன் மேல் சாய்ந்தாள்.

''சந்திரா!'' என்று வெளியே இருந்து குரல் கேட்டது. கதவைத் தட்டும் ஓசையும் கேட்டது. மாமியாரின் குரல்போலிருக்கவே சந்திரா திடுக்கிட்டு ஓடிப் போய்க் கதவைத் திறந்தாள். ''சிறுசுகளை வீட்டிலே இருக்கச் சொல்லிவிட்டு நமக்கு மட்டும் என்ன சினிமா வேண்டிக் கிடக்குன்னு நெனைச்சுண்டேதான் போனேன், அரைகுறை மனசோடே! அதுக் கேத்தமாதிரி உன் மாமனார் 'மூக்குக் கண்ணாடியை வீட்டிலேயே வைச்சுட்டு வந் துட்டேன். சினிமாவில் ஒண்ணுமே சரியா தெரியலே'ங்கிறார். போதும் படம் பார்த்த துன்னு திரும்பி வந்துட்டோம்'' என்று கதை போல் நீட்டி முழக்கிக் கூறியபடியே உள்ளே வந்தாள் சந்திராவின் மாமியார்.

''சுதந்திரத் தியாகிகள் என்றால் நாம் தான்'' என்ற பரமேசுவரன் சந்திராவின் காதோடு, ''சுதந்திரத்தையே தியாகம் செய்து விட்டோம்!'' என்றான் ஏக்கப் பெரு மூச்சோடு.

''இலை எழுப்புவார்கள் கூடிய சீக்கிரம்!'' என்று கூறி முகவாயைத் தோளில் இடித்துக் கொண்டு உள்ளே போனாள் சந்திரா.



அவர்: எங்க குடும்பத்தில் எல்லோரும் எழுது வோம். என் பெண் கவிதை எழுதி அனுப்புவாள். திரும்பி வந்துவிடும். பையன் நாடகம் எழுதி அனுப்பு வான், திரும்பிவிடும். என் மனைவி தொடர் கதை எழுதி எழுதி அனுப்புவாள். திரும்பிவிடும்.

அவள்: நீங்க என்ன எழுதுவேள்?

அவர்: நான் 'செக்' எழுதித் தருவேன்; அதுவும் திரும்பி வந்துவிடும்.




தமிழ்ப் படங்களில் 'மெட்ராஸ் பாஷை'யைப் புகுத்துவது இப்போது ஒரு வழக்கமாகிவிட்டது. அண்மையில் எங்கள் ஊரில் 'பொம்மலாட்டம்' படம் பார்த்துக்கொண்டிருந்தேன். இதில் 'சோ' 'மெட்ராஸ் பாஷை' பேசுகிறார். அப்போது எனது மலையாள நண்பர் ஒருவர் ''இதுதான் உங்களது சென்னைத் தமிழா?'' என அலட்சியமாகக் கேட்டபோது நான் தலை குனிய நேரிட்டது. அவர் கேட்டதிலும் தவறில்லை. 'மெட்ராஸ் பாஷை' மதுரை, திருச்சி, கோவை போன்ற இடங்களில் வசிக்கும் தமிழ் மக்களுக்கே புரிவதில்லை. அப்படி இருக்கும் அந்த பாஷையில் படம் எடுத்து அதைப் பிற மாநிலங்களுக்கும் அனுப்பித் தமிழை அவமானப்படுத்த வேண்டுமா? நமது தயாரிப்பாளர்கள் தமிழுக்குத் தொண்டு செய்யாவிட்டாலும் பரவாயில்லை. தமிழை அழிக்காமலாவது இருக்கலாம் அல்லவா?

திருவனந்தபுரம்,
26–6–68 எஸ். எஸ். மணி

## சுவையான கட்டுரை

எந்த ஒரு நல்ல காரியத்தையும் எதிர்க்கும் சக்தி ஒன்று கூடவே கிளம்புகிறது. 'ஸண்டே டைம்ஸ்' பத்திரிகையை நடத்தும் தாம்ஸனுக்குத்தான் எத்தனை தொல்லைகளை விளைவித்தனர் போட்டிப் பத்திரிகைக்காரர்கள்! ஆனால் அந்த அஞ்சாநெஞ்சர் எவ்வளவு சாமர்த்தியமாக அவற்றைத் தகர்த்தெறிந்து வெற்றி கண்டார்! இத்தகைய விஷயங்களை அநுபவம் புதுமை கட்டுரைகளில் வெளிப்படுத்தும் போது, சோதனை தாங்கும் சக்தி மனிதனுக்கு அவசியம் என்பதை அழகுற வலியுறுத்துகிறார் கட்டுரை ஆசிரியர். பயனுள்ள சுவையான கட்டுரைகள்!

சென்னை – 5
12–6–68 வி. ராஜப்பா

## பட்டம் எங்கே வாங்கலாம்?

சிலியில் என்ன பட்டம் வாங்கலாம்? எப்படி வாங்கலாம் என்ற தலைப்பின் கீழ் குறிப்பிட்டுள்ளது போல் பாரத கலாசாரம் தஞ்சை புஷ்பம் கல்லூரியில் படிக்க வாய்ப்புக் கிடையாது.

இந்தப் பட்டம் பழநி ஆண்டவர் கல்லூரியிலும், பூம்புகார் இந்தியப் பண்பாட்டுக் கல்லூரியிலும் மட்டுமே கற்க வாய்ப்பு உண்டு. பழநியில் போதனா மொழி தமிழ்; பூம்புகாரில் ஆங்கிலம். இவ்விரண்டு கல்லூரிகளைப் போன்றது இந்தியாவிலேயே வேறு எங்கும் கிடையாது.

இங்கு பட்டம் பெற்றவர்கள் மேலை நாடுகள் செல்ல வாய்ப்பிருப்பதோடு, இந்தியாவின் மற்றப் பகுதிகளில் இது போன்ற கல்லூரிகள் திறக்கப்பட்டால், அங்கு ஆசிரியர்களாகச் செல்லும் வாய்ப்பும் உண்டு.

பூம்புகார் இந்தியப்
பண்பாட்டுக் கல்லூரி
1–6–68 எஸ். நேத்தாஜி

## ஆசிரியர் பதில்

வட்டமேஜைப் பகுதியில் பம்பாயிலிருந்து ஒருவர் அந்நகரத்தில் பள்ளி திறந்த முதல் நாளிலிருந்தே பாடங்கள் நடக்கத் தொடங்கி விடுகின்றன, ஆனால் தமிழகப் பள்ளிகளிலோ புத்தகங்கள் வந்து சேர குறைந்தபட்சம் இருபத்தைந்து நாட்களாவது ஆகின்றன. இந்த நாட்களில் பள்ளிகளில் பாடம் நடத்துவதில்லை என்று எழுதியிருக்கிறார்..... ஏதோ சில பள்ளிகளில் அவ்வாறு இருக்கலாம். ஆனால் பெரும்பாலான ஆசிரியர்கள் முதல் நாள் வந்தவுடனேயே அவர்கள் வைத்திருக்கும் பாடத் திட்டத்தை ஒட்டி, எவற்றை யெல்லாம் முதலில் அடிப்படையாக அந்த வகுப்புக்குக் கற்பிக்க வேண்டுமோ அதைக் கற்பிக்க ஆரம்பிக்கிறார்கள். பாடத்தை ஆரம்பித்து விடுகிறார்கள். புத்தகங்களை மாணவர்கள் வாங்கும் வரை அந்தப் பாடத்தை நடத்திக் குறிப்புக்கள் தரப்படுகின்றன. ஒன்றுமே நடத்தாமல் இருபத்தைந்து நாட்களும் ஆசிரியர்கள் தூங்கிக்கொண்டிருந்தால் பாடத்திட்டத்தை எவ்வாறு முடிப்பது? ஆசிரியர்கள் மற்ற நாட்களைவிட இந்த ஆரம்ப நாட்களில் அதிகமாகக் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது.

காரைக்குடி – 2
14–6–68 கி. தாமரை

[பம்பாயில் நடப்பது போல் இங்கும் பாடப் புத்தகங்கள் முன்கூட்டியே கிடைக்குமானால் பள்ளி திறந்த ஆரம்ப நாட்களில் ஆசிரியர்களது அதிகப்படி வேலைச் சுமை தவிர்க்கப்படலாமல்லவா?
—ஆசிரியர்]

## வேதனை தரும் விஷயம்!

இன்று நவமணி பத்திரிகையைப் பார்த்தேன். அதில் இரண்டாம் பக்கத்தில் ராஜபாளையத்தில் ஸ்ரீ காமராஜ் ராஜாஜியிடம் கேள்வி என்ற தலைப்பில் செய்தி வெளியாகியுள்ளது. அதில் கடைசியில் ராஜாஜியைப் பற்றிப் பேசும்போது வயதில் முதிர்ந்தவரும், அறிவு மிகுந்தவரும் இதுவரை யாரும் காணாத தியாகியாகிய அவரை 'நீ' என்று குறிப்பிடுகிறார் காமராஜ். இந்த 'நீ' என்ற பதம் அநேக இடங்களில் இருக்கிறது. எனக்கு வயது ஐம்பத்தைந்து ஆகிறது. எந்தத் தலைவரும் இம்மாதிரி பேசி நான் கேட்டதும் இல்லை, பத்திரிகையில் படித்ததாகவும் நினைவில்லை. இதைப் படித்தவுடன் என் மனம் என்ன வேதனைப்படுகிறது என்பது பகவானுக்குத்தான் தெரியும்.

சென்னை – 18
26–6–68 நரசிம்மன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan
Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam



ஸாரிடானின் உதவி தேவைப்படும் அந்த 'அசௌகரியமான நாட்கள்'

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

